# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

| சக்கரம் 26 | பிங்களஹூ ஆடி மீ | ஆரம் 7 |
| --- | --- | --- |

## பொருளடக்கம்



## சந்தா விவரம்

**1. ஆண்டு சந்தா ரூ. 10**

ரூ. 10 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

**2. சகாய சந்தா ரூ. 5**

தர்ம சக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. ஆண்டு சந்தா ரூபாய் பத்து செலுத்த இயலாதவர்கள் ரூபாய் ஐந்து மட்டும் அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவி நிதி' யினின்று ஈடுசெய்துகொள்கிறோம். தெய்வீக விஷயமாதலால் ரூபாய் பத்து செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

**3. டிபாஸிட் சந்தா ரூ. 100**

ரூ. 100 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்துவிட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும் வரையில் மாதந்தோறும் தர்மசக்கர பத்திரிகை தங்களுக்கு வந்துகொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தா செலுத்தி புதுப்பிக்க வேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும் பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

**உள்நாடு தனி இதழ் ரூ. 1-00 வெளி நாடு வருட சந்தா ரூ. 20-00**

திருநெல்வேலி ஜில்லா

# பாபநாசத்தில் அந்தர்யோகம்-14

# 5, 6 & 7—8—77

பொதியமலை அடிவாரத்தில் இருக்கும் பாபநாசம் க்ஷேத்திரத்தில் 1977ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 5ஆம் தேதி வெள்ளி, 6ஆம் தேதி சனி, 7ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை ஆகிய மூன்று நாட்களிலும் திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம் **ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர் அவர்கள்** தலைமையில் அந்தர் யோகம் நடைபெறும். அம்பாசமுத்திரம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து ஆறு மைல் தூரத்தில் பாபநாசம் என்னும் க்ஷேத்திரம் இருக்கிறது.

அந்தர்யோகத்தில் கலந்துகொள்ள விரும்பும் அன்பர்கள், நபர் ஒன்றுக்கு ரூ. 18-00 வீதம், திருநெல்வேலி ஜில்லா, அம்பாசமுத்திரம், நூல் ஜவுளி வியாபாரம், திரு. **Sv. Rm. A.** நடராஜ முதலியார் அவர்களுக்கு மணியார்டர் மூலமோ, நேரிலோ செலுத்திப் பெயர்களைப் பதிவு செய்து, அனுமதி கார்டு பெற்றுக்கொள்ளவேண்டும்.

தாய்மார்களும் இதில் கலந்துகொள்ளலாம். பன்னிரண்டு வயதுக்குக் கீழ்ப் பட்ட சிறுவர்களும், கைக்குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும், நடைமுறையைப் பின்பற்ற இயலாதவர்களும் இதில் சேர்த்துக்கொள்ளப்படமாட்டார்கள். தங்கள் சௌகரியத்திற்குத் தேவையான படுக்கை முதலியவற்றைத் தாங்களே கொண்டுவர வேண்டும்.

குறிப்பு:— மூன்றாவது நாள் ஞாயிறு மாலை 5 மணியுடன் அந்தர்யோகம் முடிவுபெறும்.

*காரியதரிசி* — **Sv. Rm. A. நடராஜ முதலியார்**, அம்பாசமுத்திரம்

**சாந்தானந்த** — ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

---

**சேலத்தில் 7—8—77 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: ஸாரதா கல்லூரியின் பிரார்த்தனைக் கொட்டகை*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்*
*உணவு வசதி: நேரில் ரூ. 1-00 செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.*

**தூத்துக்குடியில் 31—7—77 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: கிரேட்காட்டன் ரோடு காரப்பேட்டை நாடார் எலிமெண்டரி ஸ்கூல்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்*

**திருநெல்வேலியில் 7—8—77 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: மதுரை திரவியம் தாயுமானவர் ஹிந்து கலாசாலை உயர்நிலைப்பள்ளி*
*நேரம்: காலை 10-00 மணி முதல் மாலை 4-30 மணி வரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்*






प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

*அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்*
*பிறவாழி நீந்தல் அரிது.*

சக்கரம் 26 | பிங்கள ஹூ ஆடி மீ | ஆரம் 7

## பிரார்த்தனை

यं शैवाः समुपासते शिव इति ब्रह्मेति वेदान्तिनोबौद्धा बुद्ध इति प्रमाणपटवः कर्तेति नैयायिकाः ।
अर्हन्नित्यथ जैन शासनरताः कर्मेति मीमांसकाः सोऽयं वो विदधातु वाञ्छितफलं त्रैलोक्यनाथो हरिः ।

யம் சைவா: ஸமுபாஸதே சிவ இதி பிரம்மேதி வேதாந்திநோ
பௌத்தா புத்த இதி ப்ரமாணபடவ: கர்தேதி நையாயிகா: ।
அர்ஹந்நித்யத ஜைன சாஸனரதா: கர்மேதி மீமாம்ஸகா:
ஸோऽயம் வோ விததாது வாஞ்சிதபலம் த்ரைலோக்ய நாதோ ஹரி: ॥

சிவன் என்று சைவர்கள் சொல்லுவதும், பிரம்மம் என்று வேதாந்திகள் சொல்லுவதும், புத்தன் என்று பௌத்த மதத்தவர்கள் சொல்லுவதும், கர்த்தா என்று நியாய சாஸ்திரத்தைப் பின்பற்றுபவர்கள் சொல்லுவதும், அருகன் என்று ஜைன மதத்தவர்கள் சொல்லுவதும், கர்மம் என்று பூர்வ மீமாம்சகர்கள் சொல்லுவதும் மூவுலகுக்கும் நாதனாகிய ஹரியைப்பற்றியேயாம். அப்பரமன் நமது இச்சைகளை நிறைவேற்றி வைப்பானாக.

ஒத்த சமயங்கள் ஓராறு வைத்திடும்
அத்தனொருவனும் என்பதறிந்திலர்
அத்தன் ஒருவனும் என்பதறிந்திடின்
முத்தி விளக்கு முதல்வனுமாமே.

— திருமந்திரம்

# அருள் விருந்து

அறிஞன் அளவுடன் பேசுகிறான்.

கசுமலத்தைத் தூயதாக்குவது சான்றோர் செயல்.

அபகரிப்பதில் இன்பமில்லை; எடுத்து வழங்குவதில் இன்பமிருக்கிறது.

பொறுப்பை நன்கு நிறைவேற்றுவது சுதந்திர புருஷனுக்கு அழகாகிறது.

அருள்நாட்டம் படைத்தவனுடைய முயற்சி யாண்டும் மேலானதாகிறது.

தொண்டுபுரிவது தியானம்பண்ணுவதற்கு நிகரான கடவுள் வழிபாடாம்.

வாழ்க்கையில் அரிதிலும் அரிதாயிருப்பது உன்னை நீ அறிந்து கொள்ளுதல்.

உண்மையை ஓர்தற்கு இடைஞ்சலாயிருப்பவை சினமும், பொறுமையுமாம்.

புகட்டுதல் பள்ளியில் முடிவுறுகிறது. கற்பதோ சாகும் வரையில் நிகழ்ந்தாகவேண்டும்.

முன் செய்த தீவினையின் வேகத்தைப் புதிய நல்வினையைக்கொண்டு ஒருவாறு தணிக்கலாம்.

பயன்படுத்தாது மறைத்து வைத்திருக்கிற செல்வம் ஏதேனும் ஒரு விதத்தில் கை நழுவிப்போம்.

இனி நிகழப்போவதைக் குறித்துக் கவலைப்படாதே. இப்பொழுது செய்ய வேண்டியதை நன்கு நிறைவேற்று.

ஒரு விஷயத்தைத் தெரியாதிருப்பது வெட்ககரமானதன்று. அதைத் தெரிந்து கொள்ள மறுப்பது வெட்ககரமானது.

தன் அபிப்ராயத்தை வேண்டும்பொழுது மாற்றவல்லவன் அறிஞன். மடையனோ அதை ஒருபொழுதும் மாற்றமாட்டான்.

தூக்கி வினையாற்றுதற்குத் திண்மை தேவை. அதே பாங்கில் பொறுமையுடன் அடங்கியிருப்பதற்கும் திண்மை தேவையாகிறது.

கடமையை நிறைவேற்றுவதில் கண்ணும் கருத்துமாயிருப்பவன் புகழ்ச்சியையும், இகழ்ச்சியையும் காதில் போட்டுக் கொள்ளுவதில்லை.

பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

ஈசானரோடு பரமஹம்சர்மேலும் தொடர்ந்து சம்பாஷிக்கின்றார் : "சண்டை சச்சரவுகளைப் பைசல் பண்ணுவதில் நீ மூழ்கி இருக்கின்றாய். உன் செயலைக் குறித்து அன்னை பராசக்தி தனக்குத்தானே இங்ஙனம் சொல்லிக்கொள்ளு கின்றாள் : 'அதோ ஆங்கு இருக்கும் என் குழந்தை இப்பொழுது மக்களுக்கிடையில் இருக்கும் சண்டை சச்சரவுகளைச் சமாதானப் படுத்திக் கொண்டிருக்கிறான். அச்செயலில் அவன் பரமதிருப்தியடைந்திருக்கின்றான். அங் ஙனமே அவன் செய்து கொண்டிருக்கட்டும்!"

இதற்கிடையில் ஈசானர் பரமஹம்ச தேவரு டைய பாதங்களைப் பற்றிப் பிடித்துக்கொண் டார். பணிவோடு அவர் பகர்ந்ததாவது: "என்னுடைய இச்சையால் இங்நிழ்ச்சிகள் நடைபெற்று வருவதில்லை. தெய்வாதீனமாக இவைகள் நிகழ்ந்து வருகின்றன." பரமஹம்ச தேவர் : "அது எனக்குத் தெரியும். இவை யாவும் அன்னை பராசக்தியின் திருவிளையாட லாம். ஜீவகோடிகளனைத்தையும் அவள் மயக் கத்தில் வைத்திருக்கிறாள். ஆதலால் உயிர் களனைத்துக்கும் உலகப்பற்று ஏராளமாக இருக்கிறது. அங்ஙனம் ஜீவர்களைப் பந்தபாசத் தில் ஆழ்த்தி வைத்திருப்பது அவளுடைய திருவுளப்பாங்கு ஆகும். அவளுடைய திட்டம் எத்தகையது என்பது உனக்குத் தெரியுமா?

"ஓ மனமே, சம்சார சாகரத்தில் அல்லது பிறவிப் பெருங்கடலில் மிதக்கிக் கொண்டிருக் கின்ற படகுகள் எத்தனை என்று உனக்குத் தெரியுமா? மூழ்கிப் போகின்ற படகுகள் எத்தனை என்று உனக்குத் தெரியுமா?"

மேலும் பரமஹம்சதேவர் பகர்வாராயினர் :

"ஆயிரக்கணக்கான காற்றாடிகள் கயிற்றைக் கொண்டு பிடித்தவைகளாகப் பறந்து கொண் டிருக்கின்றன. அவைகளுள் எவையோ இரண் டொன்று கயிற்றை அறுத்துக்கொண்டு விடு தலையடைகின்றன. அப்படி விடுதலையடை கின்ற காற்றாடிகளைப் பார்த்து ஓ! தாயே நீ கைகொட்டிக்கொண்டு நகைக்கின்றாய். மற்ற வைகள் கட்டுண்டு கிடப்பதையும் நீ பார்த்துக் கொண்டிருக்கின்றாய்.

"ஆயிரக்கணக்கான மக்களுள் யாரோ இரண்டொரு பேர் முக்தியடைகின்றனர். ஏனையவர்கள் எல்லாரும் உலக பந்தபாசத் தில் கட்டுண்டு கிடக்கின்றனர். அப்படி அவர் கள் கட்டுண்டு கிடப்பதும் அன்னை பராசக்தி யின் திருவுளப்பாங்கின்படியேயாம்.

"கண்ணாம்பூச்சி விளையாட்டை நீ பார்த்த தில்லையா? அந்த விளையாட்டு தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருக்க வேண்டுமென்பது பாட்டியின் உட்கருத்து. அதில் ஈடுபட்டிருக் கிறவர்கள் எல்லாரும் பாட்டியைத் தொட்டு விட்டால் விளையாட்டு முடிவுறுகிறது. அப்படி விளையாட்டை முடிவுக்குக் கொண்டு வருவது பாட்டியின் உட்கருத்து அன்று. ஆதலால் எல்லாரும் அவளைத் தொடுவதற்கு அவள் இடம் கொடுப்பதில்லை.

"பெரிய பெரிய நெல் களஞ்சியங்களை வியா பாரிகள் வைத்திருக்கிறார்கள். அக்களஞ்சியங் களில் அடுக்கி வைக்கப்பட்டிருக்கின்ற மூட்டை கள் மேல்தளத்தைத் தொடுபவைகளாக இருக் கின்றன. மற்ற தானியங்களும் அங்ஙனமே களஞ்சியங்களில் வைக்கப்பட்டிருக்கின்றன. இந்தத்தானியங்களைப் பாதுகாத்தல்பொருட்டு வியாபாரிகள் அரிசி பொரிகளுக்குத் தித்திப்பு ஏற்றி அவைகளைத் தானியக்குவியல்களைச் சுற் றிலும் போட்டு வைக்கின்றனர். இந்தப் பொரி களில் அமைந்துள்ள நறுமணத்தை எலிகள் பெரிதும் விரும்புகின்றன. பொரிகளை அவை கள் சுவைத்துப் புசிக்கின்றன. பொரிகளைத் தாண்டிக்கொண்டு உள்ளே இருக்கின்ற தானி யங்களிடத்தில் அவைகள் போவதில்லை. எலி களைத் திருப்திப்படுத்தி வியாபாரிகள் அவை களைத் தானியங்களினின்று எட்ட வைத்திருப் பது போன்று உலக மக்கள் போகத்திலும், காசு ஆசையிலும் ஈடுபடும்படி வைக்கப்பட்டி ருக்கின்றனர். எலிகளுக்குத் தானியக்களஞ் சியம் எட்டுவதில்லை. உலகப்பற்று வைத் திருக்கிறவர்களுக்குத் தெய்வ சாந்நித்தியம் எட்டுவதில்லை.

"நாரதரைப் பார்த்து 'என்னிடம் ஏதாவது வரம் கேளும்' என்று ஸ்ரீ ராமன் சொன்னான். அதற்கு நாரதர் கொடுத்த விடையாவது: 'ஓ ராமா எனக்குக் குறை ஏதேனும் உண்டா? உன்னிடம் கேட்பதற்கு வரம் யாதுளது? ஆனால் நீ வரம் கொடுத்தே ஆகவேண்டுமென்றால் நான் கேட்கின்ற ஒரு வரத்தைத் தா. உன்னுடைய தாமரைத் திருவடிகளில் எனக்கு மாறாத பக்தி வாய்த்திருப்பது ஆதுக. உலக முழுதையும் மயக்குகின்ற உன்னுடைய மோகனசக்தி என்னை மயக்காதிருப்பது ஆகுக.'

'நாரதரே மேலும் ஒரு வரத்தைக் கேட்பீராக' என்று ராமன் சொன்னான். அதற்கு நாரதர் கொடுத்தவிடையாவது: 'ஓ ராமா! எனக்கு வேறொரு வரமும் வேண்டாம். உன்னுடைய தாமரைத் திருவடிகளில் எனக்கு மாறாத பக்தி நிலைத்திருக்கும்படி நீ அனுக்ரகம் செய்வாயாக.'

"அன்னை பராசக்தியிடம் நான் இங்ஙனம் பிரார்த்தனை பண்ணினேன். 'ஓ தாயே! எனக்குப் பேரும் புகழும் வேண்டாம். யோக சாஸ்திரம் சொல்லுகிற அஷ்ட சித்திகள் எனக்கு வேண்டாம். இந்த அஷ்ட சித்திகளைத்தவிர வேறு கணக்கற்ற சித்திகள் இருக்கின்றன. அவை யாவும் எனக்கு வேண்டாம். வாழ்க்கைக்குரிய வசதிகள் வாய்க்கவேண்டும் என்று உன்னிடம் நான் கேட்கமாட்டேன். தாயே, உன்னிடம் நான் சமர்ப்பிக்கிற விண்ணப்பம் ஒன்று தான் உள்ளது. உன்னுடைய தாமரைத் திருவடிகளில் நான் யாண்டும் தூய பக்தி வைத்திருப்பேனாக. இந்த ஒருவரத்தைத் தான் நான் உன்னிடம் பரிந்து வேண்டிக் கொள்கிறேன்.'

"அத்யாத்ம ராமாயணத்தில் பகரப்பெற்றுள்ள விஷயம் ஒன்றிருக்கிறது. தம்பி லட்சுமணன் தமையன் ராமனிடம் கேட்டதாவது: 'ராமா எத்தனைவிதமான வடிவங்களில் நீ நிலைத்திருக்கின்றாய். நீ படைத்துள்ள மனப்பான்மைகள் எத்தனை! உனக்கு வடிவங்கள் பல இருக்கின்றனவென்றால் அந்த வடிவங்களின் வாயிலாக உன்னை நான் அடையாளம் கண்டுகொள்வது எப்படி?'

"ராமன்கொடுத்தவிடையாவது:'சகோதரா, ஒரு விஷயத்தை ஞாபகத்தில் வைத்துக் கொள். எங்கெல்லாம் பராபக்தி வரம்பு கடந்ததாகத் தென்படுகிறதோ ஆங்கெல்லாம் என்னுடைய சாந்நித்தியம் இருக்கிறது என்பதை உறுதியாக ஞாபகத்தில் வைத்துக் கொள்.' பராபக்தியின் அறிகுறிகள் சில இருக்கின்றன. பராபக்தி வாய்க்கப்பெற்றுள்ள பக்தன் ஒரு வேளையில் சிரிக்கின்றான். அடுத்த வேளையில் அவன் கண்ணீர் சொட்டுகின்றான். அவன் ஆடவும் பாடவும் செய்கின்றான். இத்தகைய பராபக்தி யாரிடத்திலாவது உருவெடுத்திருக்குமாகில் அவ்விடத்தில் இறைவனுடைய சாந்நித்தியம் தெளிவுற்று மிளிர்கிறது என்பதைத் திடசித்தத்துடன் நீ அறிந்து கொள்ளுவாயாக. மஹாபிரபுவாகிய சைதன்ய தேவரிடம் அத்தகைய பராபக்தி ஓங்கி உருவெடுத்திருந்தது."

பரமஹம்சதேவர் திருவாய் மலர்ந்தருளிய ஞானக் கோட்பாடுகளையெல்லாம் பக்தர்கள் செவிசாய்த்து ஆர்வத்தோடு கேட்டுக்கொண்டிருந்தார்கள். அவர் இயம்பிய அருள்மொழிகள் அன்பர்களுடைய உள்ளத்தில் ஆழ்ந்து பதிவனவாயின. அதன் விளைவாகப் பாரமார்த்திகப் பெருவாழ்வில் தீவிரமாக ஈடுபட அவர்கள் எண்ணினர்கள்.

ஈசானரிடம் இப்பொழுது பரமஹம்சதேவர் பொருள் புதைந்த சொற்களைப் பேசலாயினர். பரமஹம்சதேவர்: "முகஸ்துதி பண்ணுகிறவர்கள் பலபேர் உன்னைச் சூழ்ந்திருக்கின்றனர். அவர்களுடைய பேச்சுக்குச் செவிசாய்த்து உனது சொந்த நிலையை நீ மறந்துவிடாதே. யாரிடத்தில் உலக சம்பத்துக்கள் நிறைந்திருக்கின்றனவோ அவனிடம் முகஸ்துதி பண்ணுகிறவர்கள் ஒன்று கூடுகின்றனர். பிணத்தினிடம் கழுகுகள் கூடுவது போன்று அன்னவர்கள் நடந்துகொள்ளுகின்றனர்.

"மிகைபட உலகப்பற்று வைத்திருப்பவர்களிடம் மேலான சரக்கு ஒன்றும் தென்படமாட்டாது. சாணக் குவியல் ஒன்றுக்கு ஒப்பாகின்றார்கள் அவர்கள். இச்சகம் பேசுகின்றவர்கள் அன்னவர்களிடம் இயம்புவதாவது: தானம் பண்ணுவதில் தாம் கர்ணனுக்கு ஒப்பானவர். ஞானம் படைத்திருப்பதில் தமக்கு

நிகரானவரைக் காண்பதரிது. தெய்வ பக்திக்குத் தாம் இருப்பிடம் ஆகின்றீர்! இப்படி அவர்கள் பேசுவது வெறும் வாய்ப்பேச்சு அன்று. இச்சகம் பேசி மனிதன் ஒருவனைக் கீழ்மையில் ஆழ்த்துவதற்கான கண்ணியை அவர்கள் ஏற்கனவே வைத்துள்ளார்கள். அன்னவர்கள் பேச்சில் அடங்கியுள்ள மடமை தான் என்னே! அல்லும் பகலும் வெறும் ஏட்டுக் கல்வி படைத்துள்ள பண்டிதர்கள் சூழ்ந்து கொண்டு முகஸ்துதி பண்ணிக்கொண்டேயிருக்கின்றனர், அதற்கு இலக்காவதற்கு நிகரான இழுக்கு வேறு யாது உளது!

''உலகப்பற்றில் மூழ்கிக்கிடப்பவர்களிடத்து மூன்று விதமான குறைபாடுகளைக் காணலாம். அன்னவர்கள் தங்கள் மனைவிமார்களுக்கு அடிமைகளாக நடந்துகொள்ளுவது முதல் குறைபாடு. மிகைபட்ட பணப்பற்று வைத்திருப்பது இரண்டாவது குறைபாடு. யாரிடம் பணிவிடை பண்ணுகின்றார்களோ அவர்களிடம் முற்றிலும் அடிமைகளாய் நடந்துகொள்ளுவது மூன்றாவது குறைபாடு. அத்தகைய கயவர்களிடத்தில் ஏதாவது பண்பாட்டை எதிர்பார்க்க முடியுமா? நம்மவர்களுக்கிடையில் பிரமுகர் ஒருவர் இருக்கின்றார். அவருடைய பெயரை நான் சொல்லவேண்டியதவசியமில்லை. மாதம் ஒன்றுக்கு அவர் எண்ணூறு ரூபாய் சம்பாதிக்கின்றார். ஆனால் அவர் தன் மனைவிக்கு முற்றிலும் அடிமைப்பட்டவராக இருக்கின்றார். அவளுடைய ஆணைக்கு அடிமைப்பட்டு அவர் நிற்கவும், அமர்ந்திருக்கவும் செய்கின்றார்.

''மக்களுக்கிடையிலுள்ள சண்டை சச்சரவுகளை ஒழுங்குப்படுத்தி வைப்பது, அன்னவர்களுக்குத் தலைவனாகத் திகழ்வது—இதுவும் ஒரு வாழ்வா? உலக வியவகாரங்களுக்குரிய இப்பதவியானது எவ்வளவு அல்பமானது என்பதை எண்ணிப்பார். மக்களுக்கு வேண்டியவாறு தானம் கொடுப்பது, மக்களுக்கு வேண்டியவாறு நலன்செய்வது இத்தகைய அந்தஸ்து பாராட்டுதற்குரியதா! இத்தகைய இலௌகிகப்பதவியை நீ வேண்டியவாறு அனுபவித்தாயிற்று. இனி அப்பதவியினின்று உன்னை விடுவித்துக்கொள்ள நீ கடமைப்பட்டிருக்கின்றாய். உலக வியவகாரங்களை ஒழுங்குபடுத்துதலிலேயே காலமெல்லாம் கண்ணும் கருத்துமாயிருப்பவர்கள் ஒரு அலாதியான கூட்டத்தினர் ஆகின்றார்கள். நிரந்தரமான நலன் எதையும் அவர்கள் அதனிடத்திலிருந்து பெறமாட்டார்கள். இனி நீ உன்னுடைய மனதை இத்தகைய வியவகாரங்களிலிருந்து விடுவித்து எடுத்துக்கொள். எஞ்சி இருக்கின்ற காலத்தை ஆத்ம சாதனத்தில் பயன்படுத்து. இறைவனுடைய திருவடிகளில் பக்தியை வளர்ப்பதற்கான வாழ்க்கையில் ஈடுபடு. ஈசனுடைய அருளுக்கு நீ பாத்திரம் ஆவாயாகில் அப்பொழுது பெற வேண்டிய அனைத்தையும் நீ பெற்றவன் ஆகின்றாய். அருள் நாட்டம் பூண்டிருப்பதை முக்கியமானதாக வைத்துக்கொள். அதற்கு அனுசரணையாக தானம் பண்ணுவது, மக்களுக்கு நலம் பண்ணுவது, உலகுக்கு நலம் பண்ணுவது, உலக மக்களை உய்விப்பது போன்ற செயல்களில் ஈடுபடலாம். மக்களை நல்லவர்கள் ஆக்கவேண்டும் என்பதிலும், அவர்களை நல்வழியில் நடாத்த வேண்டும் என்பதிலும் அல்லும் பகலும் நீ கவலைப்பட்டுக்கொண்டிருக்கின்றாய். உலக மக்களைச் சிறு நெறியினின்று உய்விக்கும் திறமை உன்னிடத்து உளதா? உன்னை நீ ஒழுங்குபடுத்தினால் அது உனக்கும் உலகுக்கும் செய்கின்ற பெரியசேவையாகிறது. உன்னை நீ ஒழுங்குபடுத்த உன்னால் இயலுவதில்லை. உலகை ஒழுங்குபடுத்துதலில் நீ கவலை பூண்டவனாக இருக்கின்றாய். உன்னுடைய செயல் எதற்கு நிகரானது என்பதை உனக்கு மீண்டும் ஞாபக மூட்டுகின்றேன். திரேதாயுகத்தில் தென் இலங்கையில் இராவணன் மடிந்து ஒழிந்துபோனான். கலியுகத்தில் வட இந்தியாவில் பிறந்து வந்த பெகுடன் என்னும் மாந்தன் ஒருவன் ராவணனைக் குறித்து தலையில் அடித்துக்கொண்டு மிக வருந்தினான். அத்தகையவனுடைய பொருளற்ற செயலுக்கு நிகராகிறது உன்னுடையது!

''உனக்கு நீ கேடு சூழ்ந்துகொண்டிருக்கின்றாய். உலகப்பற்று இன்னதென்று அறியாத சந்நியாசி ஒருவனுடைய தீவிரமான பாரமார்த்திகப் பெருவாழ்வைப் பார்த்துப் பாடம் கற்றுக்கொள்ள நீ கடமைப்பட்டிருக்கின்றாய்.''

---

# பராபரக் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது)

320. ஆண்டநின்னை நீங்கா
அடிமைகள்யாம் ஆணவத்தைப்
பூண்டதென்ன கன்மம்
புகலாய் பராபரமே.

ஆனிமாதச் சக்கரத்தில் 207ஆம் பக்கம் "இறைவா, நீ ஆண்டவன், நாங்கள் உன்னுடைய அடிமைகள்" என்று துவங்கி "அதை ஒழிப்பதற்கு இறைவா நீ உபாயம் கொடுத்தருள்வாயாக என்பது இக்கண்ணியின் கருத்து"...... இங்ஙனம் முடிவுறுகிற வியாக்யானம் முழுதும் இந்தக் கண்ணிக்கு விளக்கமாகிறது.

321. எங்கணும் நீ யென்றால்
இருந்தபடி எய்தாமல்
அங்குமிங்கும் என்றலைய
லாமோ பராபரமே.

பஞ்ச பூதங்களைக்கொண்டு அமையப் பெற்றது பிரபஞ்சம். இந்த ஐந்து பூதங்களுள் நிலம், நீர், தீ, காற்று, ஆகிய நான்கும் குறிப்பிட்ட இடங்களில் இருக்கின்றன. தீ மயமாயிருப்பது சூரியன். அதைச் சந்திரனிடம் காணமுடியாது. அங்கு நீருமில்லை காற்றுமில்லை. வெறும் நிலம் மட்டும் ஆங்கு இருக்கிறது. ஆக சூரிய சந்திரர்களுள் முற்றிலும் தீ மயமாக இருப்பது சூரியன். முற்றிலும் நிலமயமாக இருப்பது சந்திரன். ஆனால் நாம் வசித்து வரும் பூமியில் இந்த நான்கு பூதங்களும் இடம் பெற்றிருக்கின்றன. நிலம் கால் பகுதியாகவும், நீர் முக்கால் பகுதியாகவும் பூமியில் பரவியிருக்கின்றன. அதைச் சுற்றிலும் சுவாசிப்பதற்குக் காற்று இருக்கின்றது. பூமிக்குள்ளே ஆழத்தில் அக்னிக்குழம்பு இருக்கின்றது. எரிமலையின் வாயினின்று சிற்சில வேளைகளில் இந்த அக்னிக்குழம்பு வெளியாகின்றது. ஆக நான்கு பூதங்களும் எங்கும் வியாபகமாக வல்லவை; குறிப்பிட்டசில இடங்களில் எல்லைக்கு உட்பட்டு இருக்கின்றன. ஆனால் முதல் பூதமாகிய ஆகாசம் எல்லையில் அடங்கியதன்று. அது அகண்டாகாரமாக எங்கும் வியாபித்திருக்கிறது. அந்த அகண்ட பெருவெளியில் ஆங்காங்கு கிரஹங்கள் ஏனைய நான்கு பூதங்களோடு கூடியவைகளாகச் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றன. இந்தக் கிரஹங்கள் எல்லையில் அடங்கியவைகள். ஒரு கிரஹத்திலிருந்து இன்னொரு கிரஹத்துக்குப் போவது சாத்தியம் என்று இன்றைக்கு நிரூபிக்கப் பெறுகிறது. ஆனால் ஆகாசத்தை நாடி எங்குமே போக வேண்டியதவசியமில்லை. இருக்குமிடமெல்லாம் ஆகாசமயமாயிருக்கிறது. இந்த ஜட ஆகாசமே பின்பு சித் ஆகாசமாகவும் மிளிர்ந்து கொண்டிருக்கிறது. ஜட ஆகாசம் பிரளயத்தில் ஒடுங்குகிறது. ஆனால் சித் ஆகாசமோ சிருஷ்டியிலோ அல்லது பிரளயத்திலோ கட்டுப்படவில்லை. அது யாண்டும் தன்மயமாயிருக்கிறது. எங்கும் வியாபகமாயுள்ள சித் ஆகாசத்தில் ஜீவர்களாகிய நாம் இடம் பெற்றிருக்கிறோம். அந்தர்யாமியாக நம் உள்ளத்தில் இலங்குவதும் சிதாகாசம். அறிவுப் பெருவெளியாகப் புறத்தில் எங்கும் வியாபகமாயிருப்பதும் சிதாகாசம். இது பரவஸ்துவைப் பற்றிய உண்மை. ஆதலால் பரவஸ்துவைத் தேடி நாம் இங்குமங்கும் அலைந்து திரிவதில் பொருளில்லை. இருந்தபடி இருக்குமிடத்தில் அப்பரவஸ்துவின் சாந்நித்யத்தை உணர்வதே நல்ல வழிபாடாகிறது. கடவுளைக் காண், கடவுளைத் தேடி அலையாதே என்பது கோட்பாடு. பஞ்சபூதங்களாகப் பரிணமித்திருப்பதும் பரவஸ்து. பஞ்சபூதங்களுக்கப்பால் சிதாகாசமாக எங்கும் நிறைந்திருப்பதும் பரவஸ்து. 'பரவஸ்துவே ஐம்பூதங்களாய், அண்டங்களாய், அனந்தங்கோடி ஜீவர்களாய், இவை யாவுக்குமப்பாலுமாய் இருக்கிறது' என்பதைக் கேள்வியால் அறிகிறவன் அதைச் சுவானுபூதியில் உணரவேண்டும். 'சென்றடையாத்திருவுடையான்' என்று இறைவனுடைய மகிமை தேவாரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. கட்புலனாகின்ற பிரபஞ்ச முழுதும் அவனுடைய தோற்றம். அவனுடைய திரு அல்லது மகிமை இவையாவிலும் மிளிர்ந்து கொண்டிருக்கிறது. இந்த அடிப்படைக் கோட்பாட்டை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு தென்படுகிற பொருள்கள் அனைத்திடத்திலும் தெய்விகத்தைக்

கண்டு பழகுதல் நல்ல ஆத்ம சாதனமாகிறது. அதன்பொருட்டு அவன் எங்கும் ஓடவேண்டிய தில்லை. தன்னுடைய மனப்பான்மையை மட்டும் மாற்றிக்கொள்ள வேண்டும். 'ஆதிபகவன் முதற்றே உலகு' என்னும் கோட்பாட்டின்படி தென்படுகின்ற அனைத்துமாய் இலங்குவது தெய்வம். ஆதலால் அனைத்தும் என்கிற காட்சியைப் பின்னணிக்குத் தள்ளிவிட்டு அது என்னும் காட்சியை முன்னணிக்குக் கொண்டு வந்து நிலைநிறுத்துவது நல்ல சாதனமாகிறது. இறைவா, உன்னைத்தேடி நான் அலைந்து திரியாமல் உன்னுடைய சாந்நித்தியத்தையே அகம், புறம் என்று கருதாதபடி யாண்டும் உணர்ந்து அதில் நிலைத்திருப்பேனாக என்பது இக்கண்ணியின் கருத்து.

322. கற்குமது வுண்டு
களித்ததல்லால் நின்னருளில்
நிற்குமது தந்ததுண்டோ
நீதான் பராபரமே.

கற்கும் மது-ஏட்டுக்கல்வியாகிய தேன். அருளில் நிற்கும் மது-பரஞானம் என்னும் தேன்.

'கல்வி என்னும் பல்கடல் பிழைத்தும்' என்றார் மாணிக்கவாசகர். பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் இன்பத்தைத் தரக்கூடியவைகளாக இருக்கின்றன. ஆதலால்தான் ஜீவகோடிகள் அதனதன் விருப்பத்திற்கும், தகுதிக்கும் ஏற்றபடி வெவ்வேறு பொருள்களில் இன்பம் கண்டு அவைகளில் கட்டுண்டவைகளாகக் கிடக்கின்றன. நாவால் நல்லுணவைச் சுவைத்து அதிலேயே ஒருவகை ஜீவர்கள் கட்டுண்டு கிடக்கின்றனர். கண்கொண்டு பார்த்து வடிவத்தில் இன்பங்கண்டு அதிலேயே இன்னொருவித ஜீவர்கள் திளைத்திருக்கின்றனர். ஊறு அல்லது ஸ்பரிச உணர்ச்சியில் இன்பம் கண்டு அதில் கட்டுண்டு கிடக்கும் கூட்டம் உண்டு. ஓசை வடிவத்திலிருக்கும் இன்னிசை அல்லது இன் சொல் ஆகியவைகளில் இன்பங் காணுகிற ஜீவர்கள் இருக்கின்றனர். வெவ்வேறு மணத்தை அல்லது நாற்றத்தை நுகர்ந்து அதிலேயே திருப்தியடைந்திருக்கும் ஜீவர்கள் உண்டு. மனிதன் என்னும் ஜீவன் நெடுநாளைக்குப் பிறகு ஐம்பொறிகள் மூலம் வரும் இன்பத்தைக் கடந்தவனாகிறான். ஆனால் அவனுடைய அறிவைத் தீட்டுவதற்குக் கல்வி ஒரு பெரிய கருவியாகிறது. கல்வியின் வாயிலாகப் பலப்பல கருத்துக்களை ரசிக்கும் மனப்பான்மை மனிதனுக்கு வருகிறது. ஐம்பொறிகள் மூலமாக வருகிற இன்பங்கள் இடையிடையே தெவிட்டிப் போகின்றன. ஆனால் அறிவின் மூலமாக வரும் இன்பம் தெவிட்டுவதில்லை. ஆதலால் கல்விமான்களாக இருப்பவர்கள் கல்வியினின்று வருகிற ஆனந்தத்திலேயே பலப்பல பிறவிகளில் கட்டுண்டு கிடக்கின்றனர். நூல் அறிவினின்று வருகின்ற இன்பம் வேறு; அருள் நிலையினின்று சுரக்கின்ற இன்பம் வேறு என்பது பல பிறவிகளுக்குப் பிறகே விவேகிகளுக்கு விளங்குகிறது. அது விளங்குகிற பொழுது நிலையற்ற இன்பத்தைத் தருகிற உலகப் பொருள்களை எல்லாம் ஒதுக்கித்தள்ளுவது போன்று ஏட்டுக் கல்வியினின்று வருகிற ஆனந்தத்தையும் ஒதுக்கித் தள்ளுவது அவசியமாகிறது. அறிவு ஆனந்தமானது. கிட்டத்தட்ட அருள் ஆனந்தத்துக்கு நிகராயிருப்பதால் அறிவு ஆனந்தத்தை ஒதுக்கித் தள்ளுவது பலர்க்குச் சாத்தியமாவதில்லை. ஏட்டுக்கல்வியைக் குறித்து A learned ignorance is the end of philosophy and the beginning of religion—ஏட்டுச் சுவையும் அக்ஞானத்துக்குரியது. அது பரஞானத்தோடு சேர்ந்ததன்று என்பதை அறிகிறவன் ஆத்மசாதனத்தில் ஈடுபடுகிறான் என்று விவேகானந்த சுவாமிகள் பகர்ந்துள்ளார்கள். ஏட்டுக் கல்வியைப்பற்றி பரமஹம்சதேவர் இங்ஙனம் பகர்ந்துள்ளார்: சர்க்கரை தித்திக்கிறது என்று பல தடவை சொன்னால் நீ தித்திப்பை அறிகின்றவனாகிறாயா? சர்க்கரையைப் பெற்று அதைச் சுவைப்பவனே உண்மையில் சர்க்கரையின் தித்திப்பை அனுபவத்தில் பெற்றவனாகிறான். பரம்பொருளிடத்திருந்து வருகின்ற பேரானந்தத்தின் நிழல்கள் போன்று விஷய ஆனந்தமும் ஏட்டுக்கல்வி ஆனந்தமும் அமைந்துள்ளன. இவை யாவையும் ஒதுக்கிவிட்டு இறைவனுடைய பேரருளுக்குப் பாத்திரமாகிறவர்களே பேரானந்தத்தை அனுபவிக்கின்றனர் என்பது இக்கண்ணியின் கருத்து.

# பரபோதம்

(ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருட்செல்வரான சுவாமி பிரமானந்தரின் போதனை)

தியானம் பேரானந்தத்தைத் தருகிறது. உன் மனம் தியானத்தில் லயமாகும்பொழுது எல்லையற்ற இன்பம் உனக்கு உண்டாவதை நீ உணர்வாய். இரவும், பகலும் கடவுள் சிந்தனையில் மூழ்கிப் பேரானந்தத்தை நீ பெற்று அனுபவிப்பாயாக! உனக்கு உண்டாகும் ஆத்மீக அனுபவங்களையும், உயர்ந்த பாவனைகளையும் எல்லாரிடமும் வெளிப்படுத்தக் கூடாது. உலக இயல்பு உடையவர்கள் அத்தகைய உணர்வுகளைப் பற்றியும், அனுபவங்களைப்பற்றியும் அறியாதவர்களாகையால் அவர்களிடம் நீ அவைகளைப்பற்றிச் சொல்லும் பொழுது உன்னுடைய வளர்ச்சிக்குத் தடையாக ஏதாவது சொல்லுவார்கள். உன் இயல்புக்கு ஒத்த சாதனையில் உள்ளவர்களிடம் உன் அனுபவங்களைச் சொல்லுவாயானால் அவர்கள் உன்னுடைய ஆத்மீக வளர்ச்சிக்கு உதவியாகப் பேசுவார்கள். உன்னைக்காட்டிலும் சாதனையில் மேலே போனவர்களிடத்து உன் அனுபவங்களைக் கூறு. உன் சாதனையில் உண்டாகும் இடையூறுகளை எல்லாம் அவர்கள் கடந்து போயிருப்பார்கள். எனவே அவர்கள் சாதனையில் உனக்கு வரும் கஷ்டங்களை எல்லாம் கடந்துபோவதற்குரிய வழியைக் காட்டித் தருவார்கள்.

நல்லவர்களுடைய கூட்டத்தில் இருப்பது நல்லது. தூய மனம் படைத்தவர்கள் ஆத்ம சாதகர்களுக்கு நல்ல துணையாக இருப்பார்கள். நீ அவர்களுடைய துணையை நாடு. ஓரிடத்தைப் பார்க்கச் செல்லும் நீ அங்குள்ள அவ்விடத்தைப்பற்றி நன்றாக அறிந்த ஒருவருடைய துணையைப் பெறுவது நல்லது. அவர் மூலம் நீ அங்குப் பார்க்கவேண்டியவற்றை எல்லாம் குறுகிய காலத்தில் பார்த்து முடித்துவிடலாம். மேலும் ஆங்கு உண்டாகும் கஷ்டங்களிலிருந்தும், ஆபத்துக்களிலிருந்தும் தப்பித்துக் கொள்ளுவதற்கும் அவர் துணையாக இருப்பார். அங்ஙனம் சாதனையில் மேலே போனவர்களிடமிருந்து நீ அரிய விஷயங்களை எளிதில் அறிந்து கொள்ளலாம். உனக்குச் சாதனையில் ஏற்படும் சிரமங்களை எல்லாம் அவர்கள் குறைத்துவிடுவார்கள்.

மரணம் எப்போது வேண்டுமென்றாலும் வரலாம். மரணம் எப்பொழுது வரும் என்று யாரும் அறிந்துகொள்ள முடியாது. நாம் மரணத்துக்கு ஆயத்தமாக இருக்கவேண்டும். ஆத்ம ஞானமே மரண காலத்தில் உதவும் செல்வமாகும். கஷ்டமும் துயரமும் புதிதாகப் போகுமிடத்தில் உண்டாகலாம். அவைகளைச் சமாளிப்பதற்கேற்ற பொருள் வசதியுடன் புது இடத்துக்குச் செல்ல வேண்டும். பிறந்தவுடன் மரணம் உண்டாவது நிச்சயம். மரணத்தில் நீ தெரியாத ஒரு இடத்துக்குப் போகிறாய். அதற்கு வேண்டியதை முன் கூட்டியே தேடிக்கொள். மரணத்தை வரவேற்பதற்கு நீ தயாராக இரு.

மானுடப் பிறப்பு ஆத்ம சாதனையில் முன்னேறுவதற்கு நன்கு உதவுகிறது. இந்த அரிய வாய்ப்பை நன்கு பயன்படுத்திக்கொள். மெய்ப்பொருளை அடைவதற்கு இப்பொழுதே முயற்சி எடுத்துக்கொள். உன்னிடத்து அளவுகடந்த தன்னம்பிக்கை இருக்கவேண்டும். நாம் கடவுளை அறியமுடியும் என்ற உணர்ச்சியுடன் சாதனையில் தீவிரமாக ஈடுபடு. நீ கடவுளைக் காண்பது நிச்சயம். உன் வாழ்வு அப்பொழுது பெருவாழ்வு ஆகிறது. பிறப்பு இறப்பு என்னும் வாழ்க்கைச் சுழலிலிருந்து உன்னை விடுவித்துக்கொள். கடவுளின் நிரந்தரத்தொண்டனாக இரு. அச்சத்தைத் தவிர். பலஹீனத்தைப் புறக்கணி. பலத்தையும் தைரியத்தையும் அளிக்கக்கூடிய எண்ணங்களையே எண்ணு. உன்னைப் பலஹீனப்படுத்தும் பழைய தவறுகளை நினைத்துப்பார்க்க வேண்டாம். பாபம் மனிதனைச் சிறுமைப்படுத்துகிறது. பாபத்தைப் பற்றி நினையாதே. மனிதனுடைய காட்சியில் தான் பாபத்துக்கு இடமுண்டு. தெய்வத்தின் காட்சியில் பாபத்துக்கு இடமில்லை. கடவுளுடைய திருஷ்டிபட்டதும் பாபங்கள் எல்லாம் நசித்துப்போகின்றன. ஒளிவந்ததும் இருள் மறைவது போன்று கடவுள் காட்சி உண்டானதும் ஜன்மாந்திரங்களில் வந்த பாபங்கள் நாசமாகின்றன.

ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய அருள் வட்டத்துக்குள் நீ வந்துவிட்டாய். அவரை உறுதியாகப் பிடித்துக்கொள். நீ கவலைப்படுவதற்கு ஒன்றும் இல்லை. ஆத்ம சாதனை தொடர்ந்து முறையாகத் தினமும் நிகழ்ந்து வரவேண்டும். தியானத்துக்கென்றும், ஆத்மீக நூல்களைப் படிப்பதற்கென்றும் நேரத்தை ஒதுக்கி வைத்து அந்த நேரத்தை நன்கு பயன்படுத்த வேண்டும். எல்லாச்சூழ்நிலைகளிலும் தினசரி செய்யவேண்டிய தியானம், நூல்களை வாசித்தல் போன்ற செயல்கள் நின்றுவிடக்கூடாது. உண்பதும் உறங்குவதும் நாள்தோறும் நிகழ்வதுபோன்று ஆத்ம சாதனையும் நாள்தோறும் நிகழ்ந்துவர வேண்டும். சாதனையை ஸ்திரமாகச் செய்து வரவேண்டும். ஸ்திரமான சாதனை இன்றி வெற்றி சாத்தியம் இல்லை. ஸ்திரமான சாதனையின் மூலமாகத்தான் மனம் கடவுளிடத்து லயமாகிறது. மனம் கடவுள்பால் லயமாகாது உலகத்திலிருந்து மனதைப் பிரித்தெடுக்க முடியாது. உலக போகங்கள் மனதை அலக்கழித்துக்கொண்டே இருக்கும். காமம், கோபம், மோகம் ஆகியவை உனக்கு எதிரிகளாகும். கடவுளின் துணைகொண்டு அவைகளை எதிர்த்து வெல்லுவதற்குரிய பலத்தைப் பெறு. மாயைக்கு அடிமையாகிவிடாதே. மாயையிலிருந்து விலகிக்கொள்.

கட்டுப்பாடான வாழ்க்கை ஆத்ம சாதன வளர்ச்சிக்கு அவசியமானது. உண்பது, உறங்குவது, வழிபாடு செய்வது, அமைந்த கடமையைச் செய்வது, நூல்கள் ஓதுவது ஆகியவை முறையாகக் குறித்த காலத்தில் நாள்தோறும் நிகழ்ந்துவர வேண்டும். ஆரம்பத்தில் கட்டுப்பாட்டுக்கும், ஒழுங்குப்பாட்டுக்கும் உன் மனது உனக்கு ஒத்துழைக்காமல் இருக்கலாம். அதற்கு நீ இடம் தந்துவிடாதே. உன் மனதுக்கு நீ அடிமையாக இருக்கக்கூடாது. துவக்கத்தில் நீ உன் மனதோடு போராடி ஆக வேண்டும். தொடர்ந்து நல்ல பழக்கத்தை நீ கடைப்பிடித்து வருவாயானல் உன் மனதை அடக்கும் வீரனாக நீ மாறி விடலாம். உன் மனதுக்கு நீ தலைவனாகும் பொழுதுதான் உன் மனது உன் வசத்துக்கு வரும். உன் மனதை உன் வசப்படுத்தி அதைத் தெய்வச் சிந்தனையில் மூழ்கியிருக்கும்படி செய்து விடுவாயானல் உனக்குக் கட்டுத்திட்டம் தேவையில்லை.

காலம் ஓடிக்கொண்டு இருக்கிறது. வாழ்க்கை தேய்ந்து கொண்டிருக்கின்றது. சென்ற காலம் திரும்பி வராது. காலம் மிக அருமையானது. காலத்தை நன்கு பயன்படுத்து. முதலில் காலத்தை வீணாக்கி விட்டுப் பின்பு அதைக் குறித்து வருந்தாதே. மரணத்துக்கு இப்போதிருந்தே ஆயத்தப்படுத்திக் கொள். கடைசி நேரத்தில் காலமெல்லாம் வீணாகப் போய்விட்டதே என்று வருந்துவதில் பயனில்லை. உடலில் வலுவிருக்கும் பொழுதே உள்ளத்தில் திண்மை இருக்கும் பொழுதே உண்மைப் பொருளைத்தேடு. பெரும்பாலோர் உண்மைப் பொருளைத் தேடுவதற்குரிய காலம் வாழ்க்கையின் பிற்பகுதி என்று எண்ணுகின்றனர். வாழ்க்கையின் முற்பகுதியில் உலக இன்பத்தை நன்கு அனுபவிக்க வேண்டுமென்ற கருத்துடையவர்களாக இருக்கின்றார்கள். இளமையில் மனம் தீவிரமான ஈசுவர நாட்டம் உடையதாக இருக்குமேயானல் அது நல்வாழ்வுக்கு அறிகுறியாகிறது. ஈசுவர நாட்டம் உடையதாக ஆகும்படி மனதுக்குப் பயிற்சி கொடுப்பதே மனதைத் திருத்தியமைப்பதற்கு உபாயமாகும். மனம் உள்முகம் நோக்கிச் சென்று பழகவேண்டும். ஸ்ரீராமகிருஷ்ணர் இளமையிலேயே தீவிரமான அம்பிகை உபாசகராக இருந்தார். அவர் காலத்தைக் கணப்பொழுதும் வீணாக்காது, கடவுள் வழிபாட்டிலேயே கழித்து வந்தார். தெய்வச் சிந்தனையிலேயே நாள் முழுவதையும் கழிக்க முடியும் என்பதற்கு அவர் வாழ்வே சிறந்த எடுத்துக்காட்டு ஆகிறது. தெய்வீக வாழ்வு அவருக்கு விளையாட்டுப் போன்று அமைந்திருந்தது. நீயும் அத்தகைய வாழ்க்கை வாழ முடியும் என்ற உறுதிப்பாட்டை உன்னிடத்தில் உண்டாக்கிக்கொள். உள்ளுவதெல்லாம் உயர்வானதாக இருக்க வேண்டும் என்று கடவுளைப் பிரார்த்தித்துக்கொள். எண்ணம் போல வாழ்வு என்பது கோட்பாடு. உயர்ந்த எண்ணம் உயர்வாழ்வுக்கு வித்தாகிறது. தெய்வீக எண்ணம் தெய்வீக வாழ்வுக்கு வித்தாகிறது. தெய்வீக எண்ணங்களை இடைவிடாது எண்ணிவருபவர்கள் வாழ்வைத் தெய்வீகமயமாக்குகின்றார்கள்.

# என் குருநாதர்

(சுவாமி விவேகானந்தர் நியூயார்க் நகரில் நிகழ்த்திய சொற்பொழிவு)

[212 ஆம் பக்கத் தொடர்ச்சி]

என் குருநாதர் சிறுவராக இருந்தபொழுது அவருடைய தந்தை காலமாகிவிட்டார். பள்ளிப்பருவம் வந்ததும் பள்ளிக்கு அனுப்பப்பட்டார். பிராமணச் சிறுவன் அவசியம் பள்ளிக்குப் போய் ஆகவேண்டுமென்றும், கற்பதே அவனுடைய தொழில் என்றும், பிராமண சமுதாயம் கட்டுப்பாடு வைத்திருந்தது. இந்தியாவிலுள்ள பழங்காலக் கல்விமுறை இன்றும் நாட்டின் பல பாகங்களிலிருந்து வருகின்றது. அக்காலத்தில் துறவிகளிடமிருந்து கற்ற குருகுலக் கல்வி நவீனக் கல்வியிலிருந்து முற்றிலும் வேறுபட்டதாகும். கல்வி கற்கும் மாணக்கன் கல்விக்காகச் சம்பளம் எதுவும் செலுத்த வேண்டியதில்லை. கல்வியை வியாபார நோக்கத்தோடு கருதினால் பாபம் என்று எண்ணினர். அறிவை எவ்வித உதவியும் பெருது எல்லார்க்கும் இலவசமாக வழங்க வேண்டும். ஆசிரியர்கள் மாணக்கர்களிடமிருந்து பொருள்கள் எதுவும் பெற்றுக்கொள்ளாததோடு, உணவும், உடையும் அவர்களுக்கு வழங்கினர். செல்வம் படைத்த குடும்பத்தினர் சில முக்கியமான நிகழ்ச்சிகளில் அவ் ஆசிரியர்களுக்கு வேண்டும் பொருள்களைக் கொடுத்து உதவி வந்தார்கள். திருமணக் காலங்களிலும், மரண நிகழ்ச்சியிலும் ஆசிரியர்களுக்கு மிகுந்த பொருளைச் சன்மானமாகக் கொடுத்தார்கள். சில தானங்களைப் பெறுவதற்கு அவர்களே முதன்மை வாய்ந்தவர்களாக இருந்தார்கள். அப்படி அவர்கள் தாங்கள் பெற்ற சன்மானங்களுக்கு மாணக்கர்களைத் தங்களுடன் வைத்திருந்து கல்வி போதிக்கின்ற செயலைச் சிறப்பாகச் செய்தனர். செல்வந்தர் வீட்டில் மணம் நடந்தால் அந்நிகழ்ச்சிக்கு ஆசிரியர்கள் வரவழைக்கப்படுவார்கள். ஆங்கு பல விஷயங்களைக் குறித்து ஆசிரியர்களுக்கிடையில் சம்வாதம் நிகழும். அப்படிச் சம்வாதம் நடந்துகொண்டு இருந்த ஒரு நிகழ்ச்சிக்கு என் குருநாதர் சிறுவராக இருக்கும் போது போயிருந்தார். சிறுவனுக்கு விளங்காத வான சாஸ்திரம், தத்துவ ஆராய்ச்சி ஆகிய விஷயங்களைப்பற்றி அவர்கள் பேசிக்கொண்டு இருந்தார்கள். அவர்கள் உரையாடினதைக் கவனித்துக் கேட்டு அவர்கள் பேச்சிலிருந்து என் குருநாதர் தீர்மானித்ததாவது: "இவர்கள் பெற்றுள்ள அறிவின் விளைவு இது தானு? ஏன் இவர்கள் இப்படிச் சண்டை போட்டுக்கொள்கிருர்கள்? பணத்துக்காகவே இவர்கள் இங்ஙனம் சண்டை போடுகிருர்கள். யார் அறிவில் சிறந்தவர்கள் என்பதை வெளிப்படுத்துகிருர்களோ அவர்களுக்கு உயர்ந்த துணிகள் கிடைக்கும். அதற்காகத்தான் இப்படிச் சண்டை போடுகிருர்கள். படிப்பின் பயன் இது என்ருல் நான் இனிமேல் பள்ளி செல்ல மாட்டேன்." அங்ஙனம் அவர் தீர்மானித்தபடியே பள்ளி செல்வதை அறவே நிறுத்திவிட்டார். அவருக்கு மூத்த சகோதரர் ஒருவர் இருந்தார். அவர் நன்கு கற்றவர். என் குருநாதரை அவர் கல்கத்தாவிற்கு அழைத்துச் சென்று தம்முடன் தங்கியிருந்து படிக்கும்படி சொன்னர். சிறிது காலத்துக்குப் பிறகு இவ்வுலக அறிவு எல்லாம் உலக வசதிகளைப் பெருக்கிக்கொள்ளத்துணைபுரியும்; அதற்குமேல் இதில் பயனில்லை என்பதை அறிந்தார். எனவே படிப்பதை அறவே நிறுத்திவிட்டு ஆத்ம ஞானம் பெறுவதற்கு மட்டும் தம்மை அர்ப்பணிப்பதற்குத் தீர்மானம் செய்தார். தந்தை காலமாகி இருந்ததோடு குடும்பமும் ஏழ்மை நிலையிலிருந்தது. ஆகையால் தம் வாழ்க்கைக்கு வேண்டியதைத் தாமே தேடிக்கொள்ள வேண்டிய நிலையில் இருந்தார். கல்கத்தாவிற்கு அருகிலிருந்த கோயில் ஒன்றில் கோயில் அர்ச்சகராகப் பணி ஏற்றுக்கொண்டார். கோயில் அர்ச்சகராவது பிராமணன் ஒருவனுக்கு இழி தொழிலாகக் கருதப்பட்டது. எங்கள் நாட்டில் உள்ள கோயில்கள் உங்கள் நாட்டில் உள்ள சர்ச்சுகள் போன்றவைகள் அல்ல. அவைகள் சர்ச்சுகள் போன்று பொதுத் தொழுகைக்காக அமைந்தவைகள் அல்ல. இந்தியாவிலுள்ள கோயில்கள் செல்வந்தர்களால் கட்டப்பட்

டவை. செல்வந்தர்களின் மதப்பற்றின் அறிகுறியாக அக்கோயில்கள் எழுப்பப்பட்டவைகளாகும்.

இந்தியாவில் பணம் படைத்திருக்கின்ற ஒருவன் கோயில் கட்ட விரும்புகின்றான். அக் கோயிலில் கடவுளினுடைய அடையாளமாக ஒரு விக்ரகத்தைப் பிரதிஷ்டை செய்கின்றான். கடவுளின் பெயரால் அவ்விக்ரகத்துக்குப் பூஜை செய்கின்றான். ஆங்கு நிகழ்வுறும் பூஜை ரோமன் கத்தோலிக்கரது கோயிலில் நிகழும் பூஜையை ஒத்திருக்கும். சாஸ்திரங்களிலிருந்து சில பகுதிகளை விக்ரகத்துக்கு முன் படிப்பதும், விக்ரகத்துக்கு முன் தீபாராதனை காட்டுவதும் பூஜையில் நிகழும் செயல்களாகும். நாம் ஒரு பெரியாரைக் கௌரவிப்பது போன்று அவ்விக்ரகத்தைக் கௌரவிப்பார்கள். இதுதான் கோயிலில் நிகழும் நிகழ்ச்சியாகும். ஆலயத்துக்குச் செல்கின்ற மனிதன் ஆலயத்துக்குச் செல்லாத ஒருவனைவிடச் சிறந்தவன் என்று கருதுவதற்கில்லை. கோயிலுக்குச் செல்லாதவன் கோயிலுக்குச் செல்கின்றவனைவிடப் பக்திமானாக இருக்கலாம். ஏனென்றால் இந்தியாவில் மதமானது ஒவ்வொருவனுடைய தனிப்பட்ட விஷயமாகும். இந்தியாவில் ஒவ்வொரு மனிதனுடைய வீட்டிலும் ஒரு கோயில் இருக்கும். அப்படி இல்லாவிட்டால் ஒரு சிறு அறையையாவது பூஜை அறைக்காக ஒதுக்கி வைத்திருப்பான். பூஜை அறைக்குள் சென்று காலையிலும் மாலையிலும் ஓரிடத்தில் அமர்ந்து ஒவ்வொருவனும் தன்னுடைய வழிபாட்டைச் செய்வான். அவ்வழிபாடு முழுவதும் மானசீகமாக இருக்கும். ஆகையால் அவன் என்ன செய்கிறான் என்பதை மற்றவன் கேட்கவோ, அறிந்துகொள்ளவோ முடியாது. வழிபடுகின்றவன் பூஜை அறையில் அமர்ந்து இருப்பதையும், விரல்களை நூதன முறையில் அசைப்பதையும், நாசித்துவாரங்களை அடைத்துத் திறந்து விபரீத முறையில் சுவாசிப்பதையும்தான் மற்றவன் காணமுடியும். அதற்குமேல் அவன் என்ன செய்கிறான் என்பதை அவன் சகோதரனாக இருந்தாலும், மனைவியாக இருந்தாலும் அறிந்துகொள்ள முடியாது. அங்ஙனம் வழிபாடுகள் யாவும் தனிப்பட்ட முறையில் அவரவர்கள் வீட்டில் செய்யப்பட்டு வருகின்றன. வீட்டில் பூஜை அறை வைத்துக்கொள்ள இயலாதவர்கள் ஆற்றங்கரைக்கோ, ஏரிக்கோ, கடற்கரைக்கோ அவரவர்கள் ஊருக்கருகில் எது அமைந்திருக்கிறதோ ஆங்குச் சென்று தங்கள் வழிபாட்டைச் செய்வார்கள். ஆலயங்களுக்குச் சென்று சிலர் வழிபாடு செய்வார்கள். ஆலயங்களுக்குச் சென்று விக்ரகத்துக்கு வழிபாடு செய்வதோடு கோயிலுக்கு அவர்கள் செய்யவேண்டிய கடமை முடிந்துவிடும். கோயில் குருக்களாகப் பணியாற்றுவது இழிவான பணி என்பது பண்டைக் காலத்திலிருந்து எங்கள் நாட்டில் கருதப்பட்டு வருகிறது. மனுஸ்மிருதியிலும் கோயில் குருக்களாகப் பணிபுரிவது இழிவானது என்று பேசப்படுகிறது. ஆகையால் அப்பணியைப் பிராமணன் ஒருவன் ஏற்றுக்கொள்வது மிக இழிவாகக் கருதப்பட்டது. பண்டைக்காலத்தில் கல்விப்பணியில் ஈடுபட்டிருப்பவர்கள் சம்பளம் எதுவும் பெறாதவர்களாக இருந்தார்கள். கல்வியை வியாபாரமாகக் கருதாது புனிதமாகக் கருதினர். சமயப்பணி செய்பவர் கல்வி புகட்டுபவரைவிடப் புனிதமானவர் ஆகிறார். ஆகையால் கோயில் குருக்கள் சம்பளம் வாங்குவது ஆட்சேபிக்கப்பட்டு வந்தது. எனது குருநாதர் கோயில் குருக்கள் பணியை ஏற்றுக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டபொழுது அவர் எவ்வளவு வேதனைப்பட்டிருப்பார் என்பதை நீங்கள் கற்பனை செய்துகொள்ளலாம்.

வங்காளத்தில் ஏராளமான கவிஞர்கள் இருந்திருக்கிறார்கள். அவர்களுடைய கவிதைகள் சாதாரண மக்களிடையே பரவி இருந்தன. ஒவ்வொரு கிராமத்திலும், கல்கத்தா நகரின் தெருக்களிலும் அவைகள் பாடப்பட்டன. அவைகளில் பெரும்பாலான கவிதைகள் தெய்வீகக் கவிதைகள் ஆகும். கடவுளை நேருக்குநேர் தரிசிப்பது அப்பாடல்களின் முக்கிய கருத்தாகும். கடவுள் சம்பந்தமான கருத்து இல்லாத சமயநூல் இந்தியாவில் இல்லை. மனிதன் கடவுள் அனுபூதி பெற்றாக வேண்டும். கடவுளைக் கண்டாக வேண்டும். கடவுளோடு பேச வேண்டும். கடவுள் உணர்வு வாய்க்கப்பெற்றவனாக ஆகவேண்டும். இதுதான் மதம் எனப்

படும். கடவுளின் காட்சி பெற்றோர், சான்றோர்களின் கதைகள் அல்லது வரலாறுகளைப் பற்றி எழுதிய நூல்கள் ஏராளமாக இந்தியாவில் உள்ளன. அவைகள்தாம் மதத்திற்கு அடிப்படையாக இருக்கின்றன. சமய அனுபூதிமான்கள் அப்பழமையான நூல்களை எழுதி உள்ளார்கள். அந்நூல்கள் வெறும் அறிவுக்காக மட்டும் எழுதப்பட்டவை அல்ல. நம் அறிவைக்கொண்டு ஆராய்ச்சி செய்து அந்நூல்களை அறிந்துகொள்ளமுடியாது. ஏனென்றால் அந்நூல்களை எழுதியவர்கள் அனுபூதிமான்கள் ஆவார்கள். அவர்கள் போன்று அனுபூதிமான்கள் ஆனவர்கள்தாம் அவர்கள் எழுதிய நூல்களை அறிந்துகொள்ள முடியும். இதே வாழ்க்கையில் அனுபூதி பெற முடியும் என்று அவர்கள் கூறியிருக்கின்றார்கள். அனுபூதி பெறுவது எல்லாருக்கும் சாத்தியம். அனுபூதிபெறவேண்டும் என்ற அருள்வேட்கை உண்டாகும் பொழுது மதம் ஆரம்பிக்கிறது என்று நான் கூறுவேன். எல்லா மதங்களும் அனுபூதி பெறுவதையே அடிப்படைக் கருத்தாகக் கொண்டிருக்கின்றன. பேச்சுத் திறமை உள்ள மனிதன் திறமையாகப் பேசலாம்; மற்றொரு மனிதன் திறமையாக வாதம் செய்யலாம். ஆனால் அத்தகையவர்களுடைய சமயச் சொற்பொழிவை மக்கள் விரும்பிக் கேட்பதில்லை. தன் தாய் மொழியிலும் நன்கு பேசத் தெரியாத மனிதனது உபதேசத்தைக்கேட்கவும் அவரைத் தெய்வமாகவைத்து வழிபாடு செய்யவும் எங்கள் நாட்டு மக்கள் ஆயத்தமாக இருக்கிறார்கள். கடவுள் அனுபூதி உடையவர்களின் மனநிலைக்குத் தன் மனதை உயர்த்திக்கொண்டவனுக்குச் சமயம் வெறும் கற்பனையாக நின்று விடுவதில்லை. சமய உண்மைகளை அவன் தெளிவாக அறிகின்றான். கடவுள் அழிவற்ற பொருள் என்பதை அறிந்த அனுபூதிமானிடம் நாட்டின் பல பாகங்களிலிருந்தும் மக்கள் வந்து சேருகிறார்கள். அவரைத் தரிசிக்கவும், அவரைத் தெய்வமாக வைத்து வழிபடவும் மக்கள் விரும்புகின்றார்கள்.

அனுபூதிமானாக என் குருநாதர் சிறுவராக இருக்கும்போதே விளங்கினர். அவர் வழிபட்ட ஆலயத்தில் ஆனந்த மயமான சக்தி சிலை இருந்தது. காலையிலும் மாலையிலும் விக்ரகத்திற்கு அவர் வழிபாடு செய்தார். நாள் ஆக, ஆக "இவ்விக்ரஹத்தில் ஏதேனும் உண்மை இருக்கின்றதா? ஆனந்த மயமான அன்னை பராசக்தி இவ்வுலகத்தில் இருப்பது உண்மை தானா? உண்மையிலேயே அவள் இவ்வுலகை நடாத்தி வருகின்றாளா? இவையெல்லாம் வெறும் கனவுதானா? சமயத்தில் ஏதாவது உண்மைஇருக்கிறதா?" என்பனபோன்ற எண்ணங்கள் அவருடைய உள்ளத்தில் எழுந்தன.

இத்தகைய ஐயப்பாடுகள் இந்தியர்களுக்கு வருவதுண்டு. நாம் செய்வது மெய்தானா என்ற சந்தேகம் இந்தியர்களுக்கிடையே எழுவது உண்டு. சமயத்தைப் பற்றிய கொள்கைகள் எங்களைத் திருப்தி செய்யமாட்டா. கடவுளைப் பற்றிய கொள்கைகள் எங்கள் நூல்களில் வேண்டிய அளவு இருக்கின்றன. ஆனால் அக்கொள்கைகளோ, நூல்களோ, எங்களைத் திருப்திப்படுத்துவதில்லை.

ஆத்மானுபூதி பெறவேண்டும் என்ற ஒரே எண்ணம் ஆயிரக்கணக்கானவர்களுடைய உள்ளத்தை வாட்டிக்கொண்டிருக்கிறது. கடவுள் ஒருவர் இருப்பது உண்மையா? அப்படி இருப்பாரே ஆனால் நாம் அவரைக் காணமுடியுமா? உண்மையை நாம் தரிசிக்கமுடியுமா? இத்தகைய எண்ணங்கள் இந்தியர்களின் உள்ளத்தில் எழுந்துகொண்டிருக்கும். மேநாட்டவர்களுக்கு இவைகளெல்லாம் வெறும் கொள்கையளவாகத் தோன்றும். ஆனால் இந்தியர்களுக்கு இவையாவும் அனுபவத்தில் அறியக்கூடிய உண்மைகளாகும். ஆத்மானுபூதி பெறுவதற்காக இந்திய மக்கள் உயிரையும் கொடுப்பார்கள். ஆத்ம ஞானம் பெறுவது இந்திய தேசீய இலட்சியமாகும். ஆத்மீகமே இந்தியாவின் செல்வமாகும். ஆத்மீகம் இந்தியாவின் உயிர் நாடி ஆகும். பழங்காலம் தொட்டு இந்தியாவிலிருந்தே உலகின் எல்லாப் பாகங்களுக்கும் ஆத்மீகம் எடுத்துச் செல்லப்படுகிறது. பழங்காலம் தொட்டு ஆத்மானுபூதி பெறுவதற்காக உலக சுகங்களையும் வசதிகளையும் துறந்துவிட்டு குகைகளில் வசித்த மக்களைப்பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். நூற்றுக்கணக்கானவர்கள் வீடு, வாசல்களைத் துறந்துவிட்டு புண்ணிய நதிகளின் கரைகளில் அமர்ந்து ஆத்மானுபூதி பெறுவதற்காக வருந்தி

அழுதிருக்கிறார்கள். அவ்வுண்மையைப் புலன் களைக்கொண்டு அறிந்துகொள்ள முடியாது. அவ்வுண்மை நம் அறிவுக்கு எட்டாதது. தர்க் கத்தின் வாயிலாகவும் அதை அடைய முடியாது. அறியாமையில் அழுந்திக் கிடப்பவர் களுக்கு அது அகப்படாது. அனுபூதிக்கு அது விளங்கக்கூடியது. புலன்களுக்கு இவ்வுலகம் எவ்வளவு உண்மையாகத் தென்படுகிறதோ அதைவிட உண்மை ஆக அனுபூதிமான்களுக்கு மெய்ப்பொருள் விளங்குகிறது. ஆத்ம ஞானம் ஒன்றே அவர்கள் உள்ளத்தில் பதிந்துள்ள லட்சியம் ஆகும். அதற்குக் காரணம் என்ன வென்பதை உங்களுக்கு எடுத்துரைப்பதற்கு இது தருணம்அன்று. இந்த லட்சியத்திற்காக ஆயிரக்கணக்கான மக்கள் உயிர் துறப்பார் கள். மேலும் ஆயிரக்கணக்கான மக்கள் உயிர் துறக்க ஆயத்தமாக இருப்பார்கள். இந்த லட்சியத்திற்காகப் பல்லாயிரக் கணக்கான வருஷங்கள் தியாக வாழ்வு வாழ்ந்து வருகின் றனர். இந்த லட்சியத்திற்காக வீடு வாசல் களைத் துறக்கின்றவர்கள் ஆயிரக்கணக்கான வருஷங்களாக இருந்து வருகின்றார்கள். இந்த லட்சியத்திற்காகத் தாங்கள் மேற்கொண்ட கடும் சாதனைகள் மூலமாக மரணம் அடைகின் றார்கள். மேனாட்டவர்களுடைய அறிவுக்கு இவைகளெல்லாம் கற்பனையாகத் தோன்றும். நான் இதை நன்கு அறிவேன். நான் மேனாட் டில் இருந்தபோதிலும் இந்தியர் லட்சியம் அனுபவத்திற்கு உரியது என்பதை நான் அறிகின்றேன்.

ஒவ்வொரு கணமும் அந்த லட்சியத்தைத் தவிர வேறொன்றை நினைப்பேனாகில் நான் பெரு இழப்பு அடைகின்றேன். லட்சியத்தில் இருந்து என்னை விலக்கி எடுக்கும் ஒவ்வொன் றையும் அது விலையுயர்ந்ததாக இருப்பினும் பயனற்றது எனக் கருதுகிறேன். வாழ்க்கை அநித்தியமானது. தேவர்களுக்கு ஒத்த அறிவு படைத்திருப்பவர்களும் விலங்கை ஒப்ப அறி வற்று இருப்பவர்களும் அழியக்கூடியவர்களே. கட்டக்கந்தையில்லாது பரிதவிக்கும் ஏழையாக இருப்பினும், செல்வத்தில் குபேரனாக இருப்பி னும் மரணத்திற்கு உள்ளாவது திண்ணம். நகரத்தில் தெருவில் வசிக்கும் கீழான மக்களுள் ஒருவனாக இருப்பினும், ஆட்சி செய்யும் சக்கர வர்த்திகளுள் ஒருவனாக இருப்பினும் நீ அழிவி லிருந்து தப்பமுடியாது. ஆரோக்கியமான உடல் படைத்திருப்பினும், நோய்வாய்ப்பட்ட உடல் படைத்திருப்பினும் உன் உடல் அழிந்தே தீரும். அன்பு மிகப் படைத்தவனாக இருப்பி னும், குரூரத் தன்மை படைத்தவனாக இருப்பி னும் முடிவில் நீ அழிந்தே ஆகவேண்டும். அழிவிலிருந்து தப்புவதற்கு உபாயம் ஒன்று உண்டு என்று இந்துக்கள் பகர்கிறார்கள். அந்த உபாயம்தான் கடவுள் நெறி அல்லது சமயநெறி ஆகும். இது உண்மை என்றால் வாழ்க்கைக்கு விளக்கம் கிடைப்பதாக ஆகி றது. வாழ்க்கை வாழ்வதற்கு உரியது ஆகிறது. வாழ்க்கை இன்பத்திற்கு உரியது ஆகிறது. அப்படி இல்லையென்றால், வாழ்க்கை பயனற்ற பாரம் ஆகிறது. இதுதான் எங்களுடைய கருத்து. தர்க்க அறிவைக்கொண்டு இதை விளக்கமுடியாது. தர்க்கங்கள் யாவும் ஓர் உண்மையை நம்பத்தக்கது என்று எடுத்துக் காட்டுவதோடு நின்றுவிடுகின்றன. நாங்கள் எதையும் தர்க்கத்தைக்கொண்டு நம்புவதில்லை. அனுபூதியைக்கொண்டே நம்புகிறோம். விஞ் ஞான உண்மைகள் யாவும் வெறும் அனுமா னம் உடையவைகளாகவே இருக்கின்றன. உண்மையை அவைகள் இன்னும் அடைய வில்லை. இந்திரியங்களைக்கொண்டு அனுப விப்பதே நமக்கு உண்மைகளாக இருக்கின் றன. உண்மைகளை உள்ளத்தில் உணர வேண்டும். சமய உண்மைகளை நாம் உணர வும் வேண்டும்; அவைகளை மெய்ப்பித்துக் காட்டவும்வேண்டும். கடவுள் ஒருவர் உண்டு என்ற நம்பிக்கை உண்டாவதற்கு ஏற்ப கட வுள் உணர்வு ஓங்கவேண்டும். சமயக்கொள்கை கள் யாவும் உண்மையானவை என்பதை நாம் அறியவும் வேண்டும், உணரவும் வேண்டும். உண்மையை அறிவதற்கு அனுபவமே சிறந்த பிரமாணம் ஆகிறது. அனுபவத்திற்கு மேலான பிரமாணம் வேறொன்றும் இல்லை. அனுபவத் தில் அறிந்தவைகளிடத்து நாம் உறுதியாக இருக்கின்றோம். பாறைபோன்று அசையாத, தளராத, உறுதியுடையவனாக நான் என் லட்சி யத்தில் இருக்கின்றேன். ஆத்மீகமே என் லட்சியம் ஆகும். ஆத்மீகமே ஹிந்துக்களின் லட்சியமாகும். (தொடரும்)

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-107

643. ज्ञानदा ஞானதா — ஞானத்தைக் கொடுப்பவள் என்பது இதன் பொருள்.

ஞானத்தில் இரண்டு கூறுகள் இருக்கின்றன. ஒன்று பிரபஞ்சத்தைப் பற்றிய ஞானம். மற்றொன்று பரதேவதையாகிய அம்பிகை அல்லது சதாசிவத்தைப் பற்றிய ஞானம். பிரபஞ்சத்தைப் பற்றிய ஞானம் அபராவித்தை அல்லது மட்டமான ஞானமாகிறது. பராவித்தை என்பது பரம்பொருளைப்பற்றிய அபரோக்ஷ ஞானமாம். ஜீவாத்மாக்கள் பிரபஞ்சத்தில் பல படித்தரங்களில் அமைந்திருக்கின்றன. அந்தந்தப் படித்தரத்தில் உள்ள ஒவ்வொரு ஜீவனும் பிரபஞ்ச ஞானத்தைச் சர்வகாலமும் பெற்று வருகிறது. அதற்கு ஞானேந்திரியங்கள் ஐந்தும் பயன்பட்டு வருகின்றன. ஊறு அல்லது ஸ்பரிச உணர்ச்சியால் புறத்திலுள்ள பொருள்கள் மிருதுவானவை அல்லது கடினமானவை, வெப்பமானவை அல்லது குளிர்ந்தவை என அறியப்படுகின்றன. ஸ்தாவரங்களாக இருக்கிற ஜீவர்களுக்கு ஸ்பரிச ஞானம் ஒன்றுதான் சாத்தியப்படுகிறது. அந்நிலையினின்று ஒருபடி மேலே வருகிற ஜீவர்கள் சுவைத்தல், தொட்டு உணர்தல் ஆகிய இரண்டு ஞானேந்திரியங்களைக் கொண்டு புறவுலகைப் பொருள்படுத்துகின்றன. மண்ணினுள் புதைந்து கிடந்து வாழும் புழுக்களுக்கு இந்த இரண்டு இந்திரியங்களும் உண்டு. அவற்றினின்று ஒருபடி மேலே வருகிற ஜீவர்களுக்கு மூன்று இந்திரியங்கள் வடிவெடுக்கின்றன. ஊறு, சுவை, மோப்பம் ஆகிய மூன்று இந்திரியங்கள் எறும்பு இனங்களுக்கு அமைந்திருக்கின்றன. இந்த மூன்று இந்திரியங்களை வைத்துக்கொண்டு எறும்பு வகைகள் அற்புதமான சமுதாய வாழ்க்கை வாழ்ந்து வருகின்றன. அடுத்தபடியாக ஒரு வகை ஈக்களுக்குப் பார்க்கும் திறமை வருகிறது. அதற்குமேல் தேன் ஈ வகைகளும், புள்ளினங்களும், விலங்குகளும் மக்களும் ஏனைய பல ஜந்துக்களும் ஸ்ரோத்ரோ இந்திரியம் அல்லது காதால் கேட்கும் திறமையைப் பெறுகின்றன. சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என ஐந்தின் வகை தெரிவான் கட்டே உலகு என்பது கோட்பாடு. இந்த ஐந்து இந்திரியங்களை வைத்துக்கொண்டு தேன் ஈ உலகம் அற்புதமான சமுதாய வாழ்க்கை வாழ்ந்து வருகிறது. எறும்பினிடத்திருந்தும், ஈயினிடத்திருந்தும் மனிதன் கற்றுக்கொள்ள வேண்டிய பாடங்கள் பல இருக்கின்றன. இத்தனை வகை உயிர்களின் வாயிலாக அன்னை பராசக்தி உலக ஞானத்தைப் பொதுவுடைமை ஆக்கிவருகின்றாள். ஒவ்வோர் உயிரின் தனிச்சிறப்பைநன்கு அறிந்துகொள்ளக் கூடிய பகுத்தறிவை அன்னை பராசக்தி மனிதனுக்குக் கொடுத்துள்ளாள். பகுத்தறிவை வைத்துக்கொண்டு மானுடன் வெகுதூரம் முன்னேற்றமடைந்திருக்கிறான்.

பிரபஞ்ச ஞானம் முடிந்த ஞானம் அன்று என்பதையும் பிரபஞ்ச வாழ்வில் குறைபாடுகள் பல இருக்கின்றன என்பதையும் மானுடன் அறிய வருகிறான். பிரபஞ்ச அமைப்புக்கு அப்பால் ஏதேனும் நிலையிருக்கிறதா என்கிற ஆராய்ச்சியை மனிதனே செய்ய வல்லவனாகிறான். பிரபஞ்சத்துக்கு அப்பால் இருப்பதை அறிந்துகொள்ள முயலுகிறவர்கள் தலைத்தரமான மக்களாகின்றனர். அங்ஙனம் பரஞானத்தை அறிந்துகொள்ளுதற்கு உபாயங்களாய் இருப்பவை பலவிதமான யோக சாதனங்களாம். அந்த யோக சாதனங்கள் பொதுவாக யோகமார்க்கம், பக்தி மார்க்கம், ஞானமார்க்கம் என வகுக்கப்படுகின்றன. இந்த யோக முறைகளை அம்பிகை கிருபை கூர்ந்து ஆத்ம சாதகர்களுக்கு நல்குகின்றாள். அதை முன்னிட்டும் அவள் ஞானதா என்னும் பெயர் பெறுகின்றாள். கடைசியாகப் பிரபஞ்சத்துக்கு அதீதத்திலுள்ள பரவஸ்துவைச் சுவானுபூதியில் அடைவதற்கான ஞானக் கண்ணையும் பக்குவமாயுள்ள ஆத்ம சாதகர்களுக்குக் கொடுத்தருள்கின்றாள். அங்ஙனம் அவள் ஞானக் கண்ணைக் கொடுப்பதை முன்னிட்டும் அவள் ஞானதா எனப் போற்றப் பெறுகிறாள். ஞானக் கண்ணைப் புராணங்கள் நெற்றிக்கண் என உருவகப்படுத்தி இயம்புகின்றன. தெய்வங்களுள் மூன்று மூர்த்திகள் நெற்றிக்கண் படைத்திருக்கிறார்கள். அவர்கள்

முறையே சிவம், அம்பிகை, கணபதி என இயம்பப் பெறுகிறார்கள். விஷய ஞானத்தில் துவக்கிப் பரஞானத்தில் முற்றுப்பெறுகிற எல்லாவிதமான ஞானங்களையும் ஜீவகோடிகளுக்கு அன்னை பராசக்தி சதா வழங்கிக் கொண்டிருக்கிறாள். ஆதலால் அவள் ஞானதா எனப் போற்றப் பெறுகிறாள்.

*644.* **ज्ञानविग्रहा ஞானவிக்ரஹா**—ஞானமாக உருவெடுத்திருப்பவள் என்பது இதன் பொருள்.

அம்பிகையின் அமைப்பு முழுதும் ஞான சொரூபமாக இருக்கிறது என்பது இதன் கருத்து. ஞான சொரூபமாக இருக்கிற அம்பிகை அனந்தங்கோடி ஜீவர்களனைத்திலும் ஞானசொரூபத்தை அமைத்திருக்கிறாள். அதைச் சுருக்கமாக விமர்சனம் செய்வோம். ஸ்பரிச ஞான சொரூபமாக ஸ்தாவரங்கள் அடிவேரிலிருந்து கொழுந்துவரையில் அமைந்திருக்கின்றன. சரியாக ஆராய்ச்சி பண்ணுகிறவர்களுக்கு இவ்வுண்மை விளங்கும். எங்கு உணவு இருக்கிறது என்பதை மோப்பத்தால் எறும்பு அறிகிறது. பக்கம் பக்கம் சத்துள்ள உணவு, சத்துக் குறைந்துள்ள உணவு ஆகிய இரண்டையும் வைத்தால் எறும்பு ஆனது சத்து உடைய உணவையே முதலில் சேகரிக்கிறது. அந்த அளவில் எறும்பு ஞான சொரூபமாக இருக்கிறது. தேன் ஈ ஆனது மோப்பத்தால் எதிரி தன் அடைக்குள் இருப்பதை அறிந்து கொள்ளுகிறது. தன் இனத்துக்கு ஆபத்து நிகழ்ந்தால் ஓசையின்மூலம் தேன் ஈ தெரிவிக்கிறது. மழை வருவதற்குச் சில நிமிஷங்களுக்கு முன்பு தேன் ஈ அத்தனையும் தன் கூட்டுக்குத் திரும்பி வருகின்றன. தம் அடையை அமைப்பதில் தேன் ஈயின் ஞானத் திறமை வெளியாகிறது. தேன் நிறைந்த பூக்கள் ஏராளமாக இருக்கிற இடங்களிலேயே தேன் ஈ தன் அடையை அமைக்கிறது. தனக்கு ஏற்ற அளவில் ஈ ஞான சொரூபமாக மிளிர்கிறது. இனி மனிதன் வெவ்வேறு துறைகளில் ஞான சொரூபீ ஆகும்படி பயிற்சி பெற்று வருகின்றான். கடைசியாகப் பரஞானத்துறையில் புகுமிடத்து பக்தி சாதனத்தின் வாயிலாக மானுட மேனி முழுதையும் ஞான சொரூபமாக மாற்றலாம் என்பதையும்ஞானியினுடையபேரமைப்பு விளக்கிக் காட்டுகிறது. ஓர் இந்திரியம் மற்ற இந்திரியங்களுக்குப் பிரதிநிதியாயிருந்துகொண்டு அற்புதமான பாங்கில் பரஞானத்தை வளர்க்கலாம் என்பதும் வெளியாகிறது. பக்தியின் விளைவாக ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சருடைய அமைப்பு முழுதுமே ஞானவிக்ரஹமாக வடிவெடுக்கலாயிற்று. வெவ்வேறு இடங்களிலிருந்து கொண்டுவந்த ஜலங்களை வரிசையாக அவர் முன்னிலையில் வைத்தால் அவைகளுக்கிடையில் கங்கை ஜலம் இன்னது என்று அவர் சுட்டிக் காட்டுவார். அது அவருக்கு எப்படி விளங்கிற்று என்று கேட்டால் பிரம்ம சைதன்யம் எங்கும் நிறைந்திருக்கிறது என்றாலும் கங்கா ஜலத்தில் அதனுடைய சாந்நித்தியம் பல மடங்கு ஓங்கியிருக்கிறது என்பார். அதே விதத்தில் வெவ்வேறு இடங்களிலிருந்து கொண்டுவந்துள்ள மண்ணைப் பரமஹம்ச தேவருக்குக் காட்டினால் பிருந்தாவனத்தினின்று கொண்டுவந்த மண்ணைக் குறிப்பிட்டுக் காட்ட அவருக்கு இயன்றது. அவருக்கு அது எப்படிச் சாத்தியமாயிற்று என்று கேட்டால் பிரம்ம சாந்நித்யம் நீக்கமற எங்கும் நிறைந்திருக்கிறது எனினும் பிருந்தாவன மண்ணிலே அதனுடைய அமைப்பு தெற்றென தமக்கு விளங்கியது என்றார். இனி பக்தி சாதனத்தின் விளைவாகச் சுவைக்கும் திறமை அவரிடம் ஞான விக்ரஹமாக வடிவெடுத்திருந்தது. வெவ்வேறு தேவாலயங்களிலிருந்து கொண்டுவந்துள்ள பிரசாதங்களை அவருக்கு வழங்கினால் பூரிப்பிரசாதத்தைக் கண்டுபிடிக்கும் ஞான ஆற்றல் அவருக்கு வாய்த்திருந்தது. பிரசாத வகைகளுள் பூரி பிரசாதத்துக்குத் தனிச் சிறப்பு இருந்ததற்கு அவருடைய அனுபவமே சான்று ஆயிற்று. அம்பிகை தானே ஞான விக்ரஹம் என்றால் அம்பிகை உபாசகராகிய பரமஹம்சரும் ஞான விக்ரஹமாக மிளிர்ந்தார். இங்ஙனம் இத்தனைவிதமான ஜீவகோடிகளின் மூலமாக அம்பிகை ஞான விக்ரஹமாக விளங்கிக்கொண்டிருக்கிறாள்.

முடிந்த நிலையில் பரஞானத்தை நாடுகின்ற ஆத்ம சாதகர்களுக்கு அம்பிகை தானே பரஞான விக்ரஹமாக இருந்து அருள் புரிகின்றாள். ஆக எல்லாப் படித்தரங்களிலும் அவள் ஞான வடிவினளாக அமைந்திருப்பது அற்புதங்களில்

பேர் அற்புதமாம்.

645. सर्ववेदान्त संवेद्या ஸர்வவேதாந்த ஸம்வேத்யா— வேதாந்த சாஸ்திரங்களால் நன்கு அறியப்பட்டவள் என்பது இதன் பொருள். உபநிஷதங்கள் வேதாந்த சாஸ்திரங்கள் எனப் போற்றப்படுகின்றன. வேதங்களின் அந்தம் அல்லது முடிந்தநிலை வேதாந்தம் எனப் படுகிறது. உபநிஷதங்களே வேதாந்தம் என்னும் சொல்லுக்கு இலக்காக அமைந்திருக்கின்றன. வேதங்களிலுள்ள மற்ற பகுதிகள் கர்மகாண்டம் என அழைக்கப்படுகின்றன. உபநிஷதங்களே ஞானகாண்டம் எனப் பெயர் பெறுகின்றன. மண்ணுலகிலும், விண்ணுலகிலும் மனிதன் விரும்புகிற மேன்மைகளுக்கெல்லாம் ஹேதுவாயிருப்பது கர்மகாண்டம். பிரபஞ்சத்துக்கப்பாலுள்ள பரபிரம்மத்தை அடைவதற்கு வழிகாட்டித் தருவது உபநிஷதங்களின் பாங்கு ஆகும். உபநிஷதங்களுக்கு மறைமுடி என்பது மற்றொரு பெயர். வேதங்களின் சிகரத்திலிருப்பவைகள் உபநிஷதங்கள். மனம், மொழிக்கு எட்டாத பரவஸ்துவை அடைவதற்கு அவைகள் வழிகாட்டித் தருகின்றன. உபநிஷதங்களை ஆராய்ச்சி பண்ணுவதாலேயே ஆத்மசாதகன் ஒருவன் பரவஸ்துவை அறிந்துகொள்ளமாட்டான். உபநிஷதங்களில் சொல்லியுள்ள முறைகளை அனுஷ்டிப்பதற்கேற்ப ஆத்ம சாதகன் பரஞானத்துக்குத் தகுதியுள்ளவனுகின்றுன். பிரபஞ்ச சம்பந்தமான வாழ்க்கை முறைகளனைத்தையும் ஆத்ம சாதகன் தியாகம் பண்ணவேண்டும். அவன் ஜிதேந்திரியனுக வேண்டும். ஐம்பொறிகளைப் பிரபஞ்ச வாழ்வுக்குப் பயன்படுத்துகின்றுன். பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறி நின்றுர் நீடு வாழ்வார் என்று உபநிஷதக்கோட்பாட்டைத்திருக்குறள் எடுத்து விளக்கி உள்ளது. न कर्मणा न प्रजया धनेन त्यागेनैके अमृतत्वमानशुः என்று உபநிஷதம் புகட்டுகிறது. வேதங்கள் புகட்டுகிற கர்மங்களால் அல்ல. ஜீவகோடிகள் செய்துவருகின்ற பிரஜாவிருத்தியினுல் அல்ல. சுகஜீவனத்துக்கு ஏதுவாயிருக்கின்ற செல்வத்தினுல் அல்ல. இவை யாவையும் தியாகம் பண்ணி விட்டு ஐம்பொறிகளை வென்று பாரமார்த்திகப் பெருவாழ்வு வாழுகின்றவனே ஞானக்கண்ணைப் பெறுகின்றுன். தான் உடல் சொருபம் அல்லன்; ஆத்ம சொருபம் என்பதை அனுபூதியின் வாயிலாக அவன் அறிகிறுன். தன்னை ஆத்ம சொருபம் என்று ஞானக்கண் கொண்டு அறிந்து கொள்பவனே பின்பு அன்னை பராசக்தியானவள் பிரபஞ்சத்துக்கப் பாலுள்ள பரவஸ்து என்னும் உண்மையை உள்ளபடி அறிய வருகிறுன். பரதேவதையைச் சொல்லால் விளக்கமுடியாது. சர்க்கரை தித்திக்கிறது என்று சொல்லுகிறோம். தித்திப்பு என்றுல் என்ன என்று ஒருவன் கேட்கிறுன். அது இனிப்பு, மதுரம் என்று ஏனைய சொற்களைக்கொண்டு அதை விளக்க முயலுகின்றோம். இனிப்பு என்றுல் என்ன? மதுரம் என்றுல் என்ன என்று மேலும் அம் மனிதன் கேட்கின்றுன். அவனுக்குச் சொல்லால் சர்க்கரையின் தித்திப்பை விளக்க முடியாது. சர்க்கரையைக் கொடுத்து அதைச் சுவைக்கும்படி செய்வதே தித்திப்புக்கு நல்ல விளக்கமாகிறது. பிரபஞ்சமயமாயிருக்கிற பொருள்களை விளக்கிக் காட்டுதற்கே சொற்கள் ஒரு அளவுக்குமேல் பயன்படமாட்டா என்றுல் இனி பரவஸ்துவை விளக்கிக் காட்டுதற்குச் சொற்கள் எங்ஙனம் பயன்படப் போகின்றன. யதோ வாசோ நிவர்தந்தே அப்பிராப்ய மனஸா சஹ என்பது ஒரு உபநிஷத்து வாக்கியம். பரவஸ்துவைக் கிரஹித்துக்கொள்ளுதற்குச் சொல்லும் அந்தக்கரணமும் பயன்படமாட்டா. பரவஸ்துவைக் கிரஹிக்க முடியாது அவைகள் தோல்வியடைந்து திரும்புகின்றன என்று உபநிஷதம் சொல்லுகிறது. சாதனத்தின் விளைவாக அந்தக்கரண சுத்தி அடைந்து வருவதற்கேற்ப பரவஸ்துவைக் கிரஹிப்பதற்கான பரிபாகம் ஓரளவில் வந்து அமைகிறது. அந்தக்கரண சுத்திக்கேற்ப உபநிஷத வாக்கியங்களின் உட்பொருளே படிப்படியாக மேல்நிலைக்கு வருகிறது. சொல்லற்கரிய பொருளை ஒரு சொல்லால் விளக்க முயலுவது உபநிஷதங்களின் திட்டமாகும். முற்றிலும் அந்தக்கரண சுத்தியடைவது ஞானக் கண்ணுகிறது. அப்பொழுது பரம்பொருளின் சொருபம் சுவானுபூதியில் உள்ளபடி தெளிவாகிறது. இதுவே ஸர்வ வேதாந்த சம்வேத்யா என்னும் நாமத்தின் உட்பொருளாம்.

---

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி: (148)** போர்க்களத்துக்குப் போய்ப்போர்புரியவேண்டுமென்று துடித்துக் கொண்டு வந்த அர்ஜுனன் எதிரிகளின் ஏற்பாட்டைப் பார்த்துப் பயந்து போய் விட்டான் என்கின்றனர் ஒருசாரார். அவன் பொய்வேஷக்காரன் ஆய்விட்டான் என்கின்றனர் இன்னொரு சாரார். அவன் துயருற்றுக் கிடந்ததை யோகம் என்கின்றது யோக சாஸ்திரமாகிய பகவத்கீதை. இந்த முரண்பாடுகளுக்கு விளக்கம் யாது?

பயம் என்பது ஒரு மட்டமான மனப் பான்மை. புதியது எதைப் பார்த்தாலும் குழந்தை ஒன்று பயம் கொள்ளுகிறது. பகலில் தைரியமாக இருக்கின்றவர்கள் இருளில் தனியாக இருட்டறை ஒன்றுக்குள் போக பயம் கொள்ளுகின்றனர். புதிய இடம் அல்லது சூழ்நிலைக்குள் போனால் சிலர் பயப்படுகின்றனர். நோயைக் குறித்துப் பலர் பயப்படுகின்றனர். மரணம் என்றால் உயிர்கள் அனைத்தும் அஞ்சுகின்றன. ஆக பயப்படுதல் என்னும் மனநிலை அசாதாரணமானது. அது அறியாமையை அடிப்படையாகக் கொண்டது. ஆனால் சில இடங்களில் அறியாமை துணிச்சலை ஊட்டுகிறது. சிறு குழந்தை யொன்று எரிகிற தீபத்தைத் தொட முந்துகிறது. அத்தகைய துணிச்சல் அறியாமையினின்று வந்தது. ஒரு தடவை தீபத்தைத் தொட்டுப் பார்த்தால் பிறகு அதன் அருகில் செல்ல குழந்தை அஞ்சும். பொதுவாக உயிர்வகைகளனைத்தும் ஏதேனும் ஒரு காரணத்தை முன்னிட்டு பயப்படும் பாங்குடையவைகளாக இருக்கின்றன.

ஆனால் அர்ஜுனனுடைய அமைப்பு அலாதியானது. விளையும் பயிர் முளையிலே தெரியும் என்னும் கோட்பாட்டுக்கு ஒப்ப அர்ஜுனன் யாண்டும் திண்ணியனாக இருந்து வந்தான். அவனுடைய மன அமைப்புக்கும் பயங்கொள்ளித் தனத்துக்கும் வெகுதூரம். தமையன்மார் யுதிஷ்டிரனிடத்திலும், பீமனிடத்திலும் அவன் மிக மரியாதையாக நடந்து கொண்டான். ஆனால் அவர்களுடைய முன்னிலையில் எக்காரணத்தை முன்னிட்டாவது அவன் அஞ்சியது கிடையாது. முதியோர்கள் எல்லாரிடத்திலும் அவன் மிக மரியாதையாக நடந்து கொண்டான். யாரைக் குறித்தாவது அவன் அஞ்சியது கிடையாது. வனவாசம் பண்ணிய பொழுது அவன் தன்னந்தனியாக இருந்து கொண்டு கடுந்தவம் பண்ணினான். ஒரு காட்டுப் பன்றியை அர்ஜுனனும் வேடன் ஒருவனும் ஏக காலத்தில் அடித்தார்கள். அந்தப் பன்றி யாருக்குரியது என்பதை முன்னிட்டு இருவருக்குமிடையில் கடும்போர் நிகழ்ந்தது. போரில் அர்ஜுனன் தோல்வியடைந்தான். அப்பொழுதும் அவன் அஞ்சவில்லை. அடுத்த நாள் யுத்தத்துக்கு வரும்படி அவன் வேடனிடம் அறைகூவினான். பூமாலை தொடுத்து சிவலிங்கத்துக்கு அதைச் சாத்தி சிவபூஜை செய்த பிறகு அவன் வேடனோடு யுத்தத்துக்குப் போனான். சிவனுக்கு அவன் சாத்திய மாலையை வேடன் அணிந்திருப்பதை அவன் பார்த்தான். சிவன் தாமே அந்த வேடனாக வந்திருப்பதாக அர்ஜுனன் அறிந்துகொண்டான். உடனே காலில் வீழ்ந்து வணங்கினான். ஆயினும் அவன் அஞ்சவில்லை. அவனுடைய தைரியத்தைச் சிவனார் பாராட்டினார். தைரியசாலி ஒருவன் தான் சிவனாருடைய பாசுபத அஸ்திரத்தைச் சரியாகக் கையாள முடியும் என்பதற்கு அறிகுறியாகச் சிவனார் அந்த அஸ்திரத்தை அர்ஜுனனுக்குச்சன்மானமாகக் கொடுத்தார். அர்ஜுனன் எதற்கும் அஞ்ச மாட்டான் என்பது சிவனார் துணிபு. அர்ஜுனனுடைய அனுக்கிரஹ மூர்த்தியாகிய இந்திரனுடைய கருத்தும் அதுவே. வெளிச்சத்தில் எங்ஙனம் இருளுக்கு இடமில்லையோ அங்ஙனம் மனபரிபாகம் அடைந்திருக்கிறவனுக்கும் அச்சத்துக்கும் வெகுதூரம். அர்ஜுனனுடைய மனபரிபாகத்துக்கு வேண்டிய சான்றுகள் மேலும் இருக்கின்றன. அவன் இந்திரலோகத்தில் தெய்விக அஸ்திர சஸ்திரங்களில் பயிற்சி பெற்றுவந்தான். அப்பொழுது ஊர்வசி என்னும் பெயர் படைத்துள்ள தேவலோக மாது ஒருத்தி அவனுக்கு மையல் ஊட்டினாள். அவன் அதற்கு விடையாக 'உன்னை நான் என் மாதாவாகக் கருதுகிறேன். ஆதலால் இந்த எண்ணத்தை ஒழித்துவிடு' என்றான். இது சாமா

வியமான மனபரிபாகமன்று. ஆனால் தன் எண்ணம் நிறைவேறாததால் அந்த மடந்தை அவனை அலியாகப்போகும்படி சபித்தாள். அவனிடத்து உண்டாகிய அந்த மாறுதல் வெட்ககரமானது. ஆனால் அர்ஜுனனோ சிறிதேனும் மனத்தளர்ச்சியுறாது தனக்கு நிகழ்ந்த விபத்தை இந்திரனைக் கொண்டு வேறு ஒரு பாங்கில் அமைத்துக் கொண்டான். அத்தகைய அர்ஜுனன் போர்க்களத்துக்கு வந்தவுடனே பயங்கொள்ளியாக மாறிவிட்டான் என்பது பொருந்தாது.

எக்காரணத்தை முன்னிட்டும் அர்ஜுனன் பொய் வேஷக்காரன் ஆகமாட்டான். ஒழுக்கம்கெட்டவன் ஒழுக்கமுடையவனாக நடிப்பது பொய் வேஷம். கல்லாதவன் கற்றவன் போன்று நடிப்பது பொய் வேஷம். ஏழை ஒருவன் பணக்காரன் போன்று நடிப்பது பொய் வேஷம். பயங்கொள்ளி ஒருவன் தைரியசாலி போன்று பாசாங்கு பண்ணுவது பொய்வேஷம். அர்ஜுனனோ எக்காரணத்தைக் கொண்டாவது எந்தச்சூழ்நிலையிலாவது பொய் வேஷம் பூண்டது கிடையாது. ஆதலால் இந்தக் குற்றச்சாட்டு அவனுக்குப் பொருந்தாது. போர்க்களத்துக்கு வந்தவுடனே அவனுக்கு மனம் மாறியது உண்மை. அந்த மாற்றத்தைக் கிருஷ்ண பரமாத்மா எங்ஙனம் பொருள் படுத்துகிறார் என்பதைப் பார்க்கவேண்டும். அர்ஜுனனை அவர் பயங்கொள்ளி என்றோ, பொய்வேஷக்காரன் என்றோ பகரவில்லை. இந்த நெருக்கடியில் இத்தகைய மனக்குழப்பம் உனக்கு எப்படி வந்தது? என்று கிருஷ்ண பரமாத்மா கேட்கின்றார். யாருக்காக விசனப்படக்கூடாதோ அவர்களைக் குறித்து நீ விசனப்படுகின்றாய் என்று அவர் குற்றம் சாட்டுகின்றார். நீ பயந்துபோய்விட்டாய் என்று அவர் சொல்லவில்லை. இந்தக் கசுமலம் உனக்கு எங்கிருந்து வந்தது? என்று அவர் ஆட்சேபம் பண்ணுகின்றார். கசுமலம் என்னும் பதம் மனக்குழப்பம் எனப் பொருள்படுகிறது.

அர்ஜுனனுக்கு மனக்குழப்பம் வந்ததற்குக் காரணம் உண்டு. பீஷ்மரும் துரோணரும் அர்ஜுனனுக்கு எதிரிகளாகப் போர்புரிவார்கள் என்பது அவன் அறிந்த விஷயம். அதற்கு அவன் ஆயத்தமாய் இருந்தான். ஆனால் போர்க்களத்தில் யுத்தத்துக்குஆயத்தமாயிருக்கிற அந்த மேலோர் இருவரையும் நேரில் பார்த்தபொழுது அவனுக்கு மனக்கலக்கம் உண்டாயிற்று. போற்றுதற்குரிய இப்பெரியோர்களை எதிர்த்துப் போர்புரிவது தனக்குப் பொருந்துமா என்னும் சந்தேகம் வந்ததும், தன் கடமை யாது என்னும் சந்தேகம் வந்தது. ஆனால் அவன் பயந்துபோகவில்லை. பீஷ்மருக்கும் துரோணருக்கும் வரப்போகிற முடிவை அவர்கள் தாமே அறிந்திருந்தார்கள். ஆனால் அவர்களைக் கொல்லுவது தனக்குப் பொருந்தாது என்று அர்ஜுனன் குழம்பியிருந்தது அவனுக்குப் பொருந்தாது என்பதைக் கிருஷ்ண பரமாத்மா எடுத்துக் காட்டினார். அறம் காத்தல் பொருட்டுப் பெரியோரையும் எதிர்த்துப் போர்புரியலாம் என அறியவந்த பிறகு அர்ஜுனனுக்கு மனத்தெளிவு உண்டாயிற்று. தன் கடமை எது என்று தனக்கு வந்த சந்தேகத்தைப் பயங்கொள்ளித்தனம் எனப் பொருள்படுத்தலாகாது. கீதையில் பதினெட்டு அத்தியாயங்கள் இருக்கின்றன. ஒவ்வோர் அத்தியாயமும் ஒரு யோகம் எனப் பெயர் பெறுகிறது. முதல் அத்தியாயம் அர்ஜுனன் விசனப்பட்ட யோகம் என்னும் பெயர்பெறுகிறது. விசனப்படுவது யோகமாகாது. அர்ஜுனன் விசனப்பட்டதை ஒரு யோகம் என்று யோக சாஸ்திரமாகிய பகவத்கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது. அர்ஜுனனுக்கு வந்த விசனம் உலகத்தவர்கள் படும் விசனத்தோடு சேர்ந்ததன்று. மேலோரைக் கொல்லுவது தர்மமாகுமா என்பது அவன் உள்ளத்தில் வந்த ஐயம். அந்த ஐயமானது அறநெறி விளக்கத்துக்குத் தூண்டுதல் போடுகிறது. அப்படித் தூண்டுதல் போடுவதை முன்னிட்டு அது யோகம் எனப் பாராட்டப்படுகிறது. அழுகைக்கும் யோகத்திற்கும் வெகுதூரம். ஆனால் 'வல்வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே' என்கிறார் மாணிக்கவாசகர். அந்த அழுகை உலக அழுகையோடு சேராது. அந்த அழுகை தெய்வத்தைக் குறித்த அழுகையாகையால் அது தெய்வீக உணர்வை வளர்க்கிறது. அங்ஙனம் அர்ஜுனனுக்கு வந்தகுழப்பம் எது தர்மம்என்பதைப்பற்றியதாகும். ஆதலால் அது அர்ஜுனவிஷாதயோகம் எனப்படுகிறது.

# ஜீவபோதமும் பரபோதமும்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1972ஆம் ஆண்டு திருவேடகம் அந்தர்யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

சூரியன் எல்லாத் திசைகளுக்கும் வெளிச்சத்தையும் வெப்பத்தையும் தருகின்றது. உயிர்கள் யாவுக்கும் பிராண சக்தியையும் தருகின்றது. நம் சரீரசம்பந்தமான வாழ்வு சூரியனுடைய சாந்நித்தியத்தால் நன்கு நடைபெற்று வருகிறது. சூரியனுக்கு நிகராகப் பரம்பொருள் ஏக வஸ்துவாக, போற்றுதற்குரிய பொருளாக, உயிர்கள் அனைத்துக்கும் மூலகாரணமாக இருக்கின்றது. பரம்பொருளிடத்திலிருந்து சராசரங்கள் அனைத்தும் தோன்றி வந்துள்ளன. பரம்பொருளிடத்திலேயே அவை யாவும் நிலைபெற்றிருக்கின்றன. பரம்பொருளிடத்திலேயே அவையாவும் ஒடுங்குகின்றன. சினிமாத் திரையின் மீது வெளிச்சத்தையும் நிழலையும் ஆரோபிப்பதன் வாயிலாக வடிவங்கள் தோன்றி நகர்வது போன்றும் பேசுவது போன்றும் தென்படுகின்றன. அதற்கு நிகராக சிதாகாசம் தன்னிடத்திலிருந்து மாயாசக்தியினால் பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கிறது. திரைப்படக் காட்சியில் புறத்திலிருந்து வடிவங்கள் தோற்றுவிக்கப்படுகின்றன. சிதாகாசம் பிரபஞ்சத்தையும் ஜீவர்களையும் தன்னிடத்திலிருந்து தோற்றுவித்துத் தன்னிடத்திலேயே நிலைபெறச் செய்து தன்னிடத்திலேயே ஒடுக்கிக்கொள்கிறது. சித் பொருள்தான் வாழ்க்கைக்கு மூலகாரணமாக இருக்கின்றது. சித் பொருளைச் சார்வது வாழ்க்கையினுடைய குறிக்கோள் ஆகும், ஜீவர்களாகிய நம்மிடத்து தெய்வீக இயல்பும் பிரபஞ்சத் தன்மையும் சேர்ந்தே இருக்கின்றன. அவ்விரண்டின் சேர்க்கையினல் ஜீவாத்மாக்களாகிய நாம் தோற்றத்துக்கு வந்திருக்கிறோம். நிலையற்ற பிரபஞ்சப் பகுதியை ஒதுக்கித் தள்ளிவிட்டு நிலைபேறுடைய பரமாத்ம சொருபமாக நம்மை அமைத்துக்கொள்ளுங்கால் முடிந்த நிலையை அடைகின்றோம். அப்பொழுது பரிபூரண நிலையை அடைந்தவர்கள் ஆகின்றோம். ஜீவர்களாகிய நாம் எதை ஒதுக்கவேண்டும், எதை உறுதியாகப் பிடிக்கவேண்டும் என்பதைத் தாயுமானவர் பாடல் ஒன்றைக்கொண்டு ஆராய்வோம்.

கடவுளுடைய மூலநிலை பேரறிவு சொருபமாகின்றது. அவர் சகுணமாக விளங்கும் பொழுது ஷட்குணசம்பன்னனாக இருக்கின்றார். ஜீவர்களாகிய நாம் அறியும் தன்மை உடையவர்களாக இருக்கின்றோம். அது ஜீவனுக்குரிய சிறப்பு ஆகிறது. மேஜை ஒரு ஜடப்பொருள். அதற்கு அறிகின்ற தன்மை இல்லை. விஷயத்தை அறியும் போதம் முடிவில் ஆத்ம போதமாக மாறுகின்றது. தன்னையே அறியுமிடத்துத் தன்னுடைய யதார்த்த நிலையை அறிந்துகொள்வதாகிறது. மனிதனுக்கு நிகராகப் பொம்மை ஒன்று செய்கின்றனர். அப்பொம்மை சைகிள் ஓட்டுகிறது. டெலிபோனில் சில வார்த்தைகள் பேசுகிறது. நடக்கவும் செய்கிறது. ஆனல் அதனிடத்துப் போதம் இல்லை. அது வெறும் யந்திரம். நாம் போத சொருபமாக இருக்கிறோம். இன்பதுன்பங்கள், நலம்கேடுகள், தக்கவை தகாதவை என்று பாகுபடுத்துகின்ற உணர்வு நமக்கு இருக்கிறது. நம் அறிவைப் பேரறிவாக, வாலறிவாக மூல நிலைக்குக் கொண்டுபோவது நம்முடையகுறிக்கோள்.

சூரிய ஒளி மேல் கீழ் பக்கங்களிலெல்லாம் பரவி இருப்பதுபோன்று பரமாத்மசொருபம் எங்கும் நிறைபொருளாக இருக்கின்றது. அங்கு இங்கு எனதபடி எங்கும் பிரகாசமாய் அப்பெரிய பொருள் இருக்கிறது. அது எப்பொழுது தோன்றியது என்று அதற்குத் துவக்கம் கூறமுடியாது. அது எப்பொழுது முடியும் என்று அதற்கு முடிவும் சொல்ல முடியாது. அகண்ட வஸ்துவாக அது இருக்கிறது. ஆத்ம சொருபம் அனுதியாக, சாசுவதமாக, ஆனந்தமாக யாண்டும் இருக்கின்றது. தாயுமானவர் ''ஆதி நடு அந்தமும் இலாததாய்'' என்று பகர்கின்றார்.

நம்முடைய நிஜசொருபம் தூய்மையானது. பிரபஞ்சத்தினுடைய பாங்கை ஏற்றுக்கொண்டு நாம் மலினப்பட்டவர்கள், மும்மலத்தில் தோய்ந்தவர்கள் ஆகின்றோம். மலத்தை

நீக்குதல் வாழ்க்கையின் திட்டம் ஆகிறது. பிர பஞ்சத்தில் உள்ள பொருளை ஆழ்ந்து ஆராய் வது நம்முடைய சொருபத்தை ஆராய்வதா கிறது. வானத்திலிருந்து விழுகின்ற மழை நீர் சுத்தம் ஆனது. செயற்கை முறையில் தூய் மைப்படுத்தும் நீரும் சுத்தமானது. சுத்தநீர் நிலத்தில் படிந்த பிறகு சேற்று நீராகவும், சாக்கடை நீராகவும் மாறுகின்றது. நீரினி டத்துச் செயற்கையாக வந்தகுறைநிலை சேற்று நீரிலும் சாக்கடை நீரிலும் இருக்கிறது. நீரி விடத்துள்ள நீர்மையின் மீது இக்குறைநிலை இணைக்கப்பட்டுள்ளது. புனிதம் கெட்டுப் போன நிலையிலும் நீர் நீராக இருக்கிறது. நீரோடு சேர்ந்துள்ள மற்றவைகளை முன்னிட்டு அது தீண்டத்தகாத சாக்கடை நீர் என் கிறோம். நீரோடு சேர்ந்துள்ள மற்ற பொருள் களின் தோஷத்தை நீரின்மீது ஆரோபித்து நீர் குற்றம் வாய்ந்தது என்கின்றோம். நன்கு ஆராய்ச்சி செய்கிறவர்களுக்கு இது விளங்கும். உண்மையில் நீர் குற்றமுடையது அன்று. நீரி லிருந்து அதனோடு சேர்க்கப்பட்ட பொருள் களைப்பிரித்தெடுத்து விட்டால் நீர் தன்மயமாக இருக்கிறது. ஜீவாத்மாவாகிய நாம் நம்மைப் பிரபஞ்சத்தோடு ஐக்கியப்படுத்தி பிரபஞ்சத் தின் தோஷத்தை நம்மீது ஆரோபித்துக் கொண்டு நாம் பாபிகள் என்று நினைக்கின் றோம். சினிமாத்திரையின் மீது பாபியினுடைய படம் ஒன்று தென்படுகிறது. பாபியைக் காட்டுகின்ற திரை பாபத்தன்மையை அடைந்துவிடுவதில்லை. தெய்வ சொரூபம் சினிமாத்திரை மீது ஆரோபிக்கப்படுகிறது. தெய்வ வடிவத்தைக் காட்டுவதினால் திரை தெய்வத்தன்மையுடையதாக ஆவதில்லை. திரை எப்பொழுதும் தன்மயமாக இருக்கிறது. கண் ணாடி ஒன்றின் முன் கீழான மனிதன் நின் றால் அவனை உள்ளபடி கண்ணாடி காட்டித் தருகிறது. கீழான மனிதனைக் கண்ணாடி காட்டுவதினால் கண்ணாடி மலினப்படுவதில்லை. புண்ணியமானஒருவனதுவடிவத்தைக்கண்ணாடி பிரதிபலிக்கிறது என்று வைத்துக்கொள் வோம். புனிதவானுடைய வடிவத்தைப் பிரதி பலிப்பதனால் கண்ணாடி புனிதம் ஆய்விடுவ தில்லை. கண்ணாடி யாண்டும் தன்மயமாய் இருக்கின்றது. அங்ஙனம் ஆத்ம சைதன்யம் தன்மயமாகஇருக்கின்றது. சரீரத்தின் கூருகிய குண தோஷங்களை ஆத்மா வாங்கிக்கொண் டது போன்று தென்பட்டாலும் அது உண்மை யில் வாங்கிக் கொள்வதில்லை. நாம் புனிதம் வாய்ந்தவர்கள். புனிதத் தன்மையை உறுதிப் படுத்துகின்ற அளவு நாம் சாதனத்தில் மேலே போகின்றோம். அறியாமையினால் நாம் செய்த தவறுகளைச் சிந்தனை செய்வதோ, அவற்றைக் குறித்து நினைப்பதோ சாதனத்துக்கு இடை யூறு ஆகும். தவறை அடியோடு மறந்துவிட்டு சாதனத்தில் ஆழ்ந்து ஈடுபடவேண்டும். அயர்ந்த உறக்கத்தில் நாம் புனித நிலையில் இருக்கிறோம். அயர்ந்த உறக்கத்தில் கொலை பாதகன் கொலைபாதகன் அல்லன். அயர்ந்த உறக்கத்தில் சைதன்யம்தான் எஞ்சியிருக் கின்றது. சிந்தித்துப் பார்ப்பவர்களுக்கு இவ் வுண்மை விளங்கும். விழிப்பு நிலையில் சைதன் யத்தில் நிலைத்து இருக்க முயல்வது சாதனம் ஆகிறது. கிறிஸ்தவர்கள் பாபத்தைப் பற்றிப் பேசுவார்கள். அப்படிப் பேசுவது பொருந் தாது. அஞ்ஞான நிலையில் மனிதன் தன்னைப் பாபி என்று எண்ணிக் கொள்கின்றான். பாபத்தை விட்டொழிப்பதுதான் சாதனத்தின் நோக்கமாகும். "புனிதமாய்" என்று தாயு மானவர் பகர்கின்றார்.

இமயமலையில் கைலாயம் அமைந்திருக்கி றது. கைலாசத்துக்குத் தென்புறத்தில் 'மானச சரோவரம்' என்னும் தடாகம் இருக்கின் றது. காலை ஒன்பது மணிக்குப் பிறகு காற்று வீச ஆரம்பிக்கிறது. அப்பொழுது தடாகத் தில் அலை வீசுகிறது. தடாகத்தில் அலை வீசும் பொழுது தடாகத்தின் வடபுறத்தில் இருக்கும் கைலாசத்தின் பிம்பம் தடாகத்தில் சரியாகத் தெரிவதில்லை. தடாகத்தின் கீழ்ப்பகுதியில் இருக்கும் வெண்மையான மணலும் அலை வீசும் போது தென்படுவதில்லை. காலை ஒன்பது மணிக்கு முன்பு காற்று வீசுவதில்லை. அப் பொழுது தடாகம் வரைந்த படம் போன்று அசையாது இருக்கிறது. அது தடாகத்தின் விகாரப் படாத நிலையாகும். தடாகம் விகார மற்று இருக்கிறபொழுது கைலாசத்தின் பிம்பம் அப்படியே அதில் பிரதிபலிக்கிறது. தடாகத்தின் அடிப்பகுதியில் உள்ள மணலும் தென்படுகிறது. கண்ணாடி ஒப்பமாக இல்லா

விட்டால் முகம் அதில் திரிவுபட்டதாகத் தென் படும். ஒப்பமாக உள்ள கண்ணுடி முகத்தை உள்ளபடி காட்டும். நம்முடைய உள்ளத்தில் விகாரம் உண்டானுல் அது ஆத்ம சொரு பத்தை மறைக்கிறது. ''எண்ணுத எண்ண மெல்லாம் எண்ணி எண்ணி ஏழை நெஞ்சம் புண்ணுகச் செய்ததினிப்போதும் பராபரமே'' என்கிருர் தாயுமானவர். அலே வீசாத 'மானச சரோவரம்' போன்று மனதில் எவ்வித எண்ண மும் எழாது நிர்விகாரமாக, சலனமடையாத தாக, எவ்விதமாறுதலும் இல்லாததாக விளங் கும் நிலே ஏற்படும் பொழுது மனதில் புனிதத் தன்மை உண்டாகிறது. மனதுக்கு ஆதாரமாக இருக்கின்ற ஆத்மசொருபத்தைக்கிரகிக்கின்ற வல்லமை மனதுக்கு அப்பொழுது வருகின்றது. மனம் நிர்விகாரநிலேயில் நிலேபெறுகின்ற அளவு அது சிறந்த சாதனம் ஆகின்றது. இதனைத் தாயுமானவர் ''அவிகாரமாய்'' என்று பகர்கின்ருர்.

நாம் நாள்தோறும் மூன்று அவஸ்தைகளில் மாறி மாறி இருக்கின்ருேம். ஒவ்வொரு அவஸ் தையிலும் நாம் இன்பம் பெறுவதற்கு விழை கின்ருேம். நாம் ஜாக்கிரதா அவஸ்தையில் பெறுகின்ற இன்பம் போக்குவரவுடைய இன்பமாகும். காலேயிலிருந்து மாலே வரையில் எத்தனேயோ தடவை மகிழ்ச்சிக்கும் சோர் வுக்கும் ஆளாகி இருக்கின்ருேம். நாம் வாழ்க் கையை விமர்சனம் பண்ணிப்பார்த்தால் இவ் வுண்மை விளங்கும். நாம் ஆனந்த சொருபம். விகாரப்பட்ட ஆனந்தம் துன்பமாகத் தென்படு கிறது. முகத்தை அகலமாகக் காட்டக் கூடிய கண்ணுடி இருக்கின்றது. முகத்தை நீளமாகக் காட்டக் கூடிய கண்ணுடி இருக்கின்றது. மேடு பள்ளமுடைய கண்ணுடி முகத்தைக் கோணலாகக் காட்டும். ஒரே நிலேயில் உள்ள வடிவத்துக்கு இவையாவும் விகாரங்கள் ஆகின்றன. அங்ஙனம் மனதில் வருகின்ற விகா ரத்தின் விளைவாக நம்முடைய ஆனந்த நிலேக் குப்போக்குவரவு ஏற்படுகின்றது. சிறிதுநேரம் அனுபவிக்கும் இன்பத்திற்குச் சிற்றின்பம் என்று பெயர். எதை முன்னிட்டும் மனம் விகாரப்படாது இருக்குமானுல் நம் இன்பத் திற்குத் தடை ஏற்படுவது இல்லே. போக்கு வரவற்ற இன்ப சொருபமாக இருக்கின்ருேம். மாணுக்கர்கள் எழுத்துக்களைப் பார்த்து எழுதிப்பழகுகின்றனர். அவர்கள் எழுத்தைப் பார்த்து எழுதுவது போன்று நாம் சுஷுப்தி அவஸ்தையைப் பார்க்கவேண்டும். சுஷுப்தி யில் நமக்கு விகாரப்படாத இன்பம் இருக்கி றது. தூங்கிக்கொண்டிருப்பவன் பொருளே ஒரு வன் கொள்ளேயடித்துக் கொண்டு போகலாம். பொருள் போவது குறித்துக் கவலேப்படாது தூங்கிக்கொண்டிருப்பவன் ஆனந்தத்தை விட்டுப் பிசகாது இருக்கின்ருன். தூங்கிக் கொண்டிருப்பவனே ஒருவன் ஸ்துதி பண்ண லாம். அவன் அதைப் பொருட்படுத்துவதில்லே. அவன் தன்மயமாக இருக்கின்ருன். தூங்கும் பொழுது உண்டாகும் ஆனந்தம் புறத்திலி ருந்து வரவழைக்கப்பட்ட ஆனந்தம் அன்று. அவ்ஆனந்தம் ஆத்மாவினிடத்துள்ள ஆனந்த மாகும். ஜாக்ரதா அவஸ்தையில் அந்த ஆனந் தத்தை உலகத்திலுள்ள பொருள்களோடு சம்பந்தப்படுத்துகிருேம். அப்படிச் சம்பந்தப் படுத்தும் பொழுது ஏற்புடையது, ஏற்புடை யது அல்லாதது என மாறிமாறி அமைகின் றது. இயற்கையில் உண்டாகின்ற மாறுதல் களுக்கு நாம் உட்பட்டவர் ஆகின்ருேம். மழை வருவதற்கு முன்பு ஆகாயத்தில் மேகம் கட்டி குளிர் காற்று வீசுகிறது. அந்தச் சூழ்நிலே நமக்குப் பிரீதிகரமாக இருக்கிறது. மேகம் கலேந்து வெயில் அடிக்கும் பொழுது சங்கட மாக இருக்கிறது. நம்மைப்பற்றிப் பிறர் சுடு சொல் சொல்லுகின்ருர்கள். அந்தச் சொல்லேக் கேட்கும்பொழுது நாம் படாதபாடுபடுகின் ருேம். பொருளற்ற ஸ்துதி பண்ணினுல் உனக்குத் தலேக்கிறுக்கு வந்துவிடுகிறது. இங் ஙனம் புறத்தில் வருகின்ற மாறுதலுக்கு ஏற்ப நாம் இன்பதுன்பங்களுக்கு வசப்பட்டவர் களாகின்ருேம். எல்லாச் சந்தர்ப்பங்களிலும் நாம் ஆனந்த சொருபமாக இருக்கவேண்டும். நம்முடைய ஆனந்தம் பிரகிருதியோடு சம்பந் தப்பட்டதன்று. உலகத்தில் உண்டாகின்ற மாறுதல்கள் நம் மனதைத் தாக்குகின்றன. மனதோடு சம்பந்தப்படுகிறபொழுது நாம் தாக் கப்பட்டவர்களாகின்ருேம். புறஉலகில் ஏற் படுகிறமாறுதல்களே ஒதுக்கித் தள்ளிவிட்டுத் தன்னில்தானுய் இருக்கின்றபொழுது விழிப்பு நிலேயில் ஆனந்த சொருபமாக இருக்கமுடியும்.

இதற்குச் சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். சில நூற்றாண்டுகளுக்கு முன் சீன தேசத்தில் பண்பட்ட பெரிய ஞானி ஒருவர் இருந்தார். அவருடைய வாழ்க்கையில் அவருக்குச்சோதனை ஒன்று வந்தது. அவர் தங்கியிருந்த இடத்திற்கு அருகாமையிலுள்ள வீட்டில் கன்னிகை ஒருத்தி மகப்பேறு பெற்றாள். இதற்குப் பொறுப்பு யார் என்று அவளை மக்கள் கேட்டனர். அவள் அந்த ஞானியைக் குறித்து 'அவர் தான் பொறுப்பு' என்று கூறினாள். ஞானியின் மீது ஊர் மக்களுக்குச் சினம் வந்துவிட்டது. "ஞானியென்று சொல்லிக்கொண்டு பொய்வேஷம் போடுகின்றான்" என்று அவரைத் திட்டி அப்பெண்ணையும், "குழந்தையையும் அவரிடமே சேர்ப்பித்தார்கள். "நீர் தான் இவர்களுக்குப் பொறுப்பு. இவர்களை நீர் தான் கவனிக்கவேண்டும்" என்று ஊர் மக்கள் கூறினர். "அப்படியா" என்று அப்பொறுப்பை அவர் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டார். அவர்களைக் கவனிப்பதற்குத் தக்க ஏற்பாடுகள் செய்தார். ஆனால் பொய் சொன்ன அப்பெண்ணின் மனம் அவளை உறுத்திக்கொண்டே இருந்தது. இரண்டு நாட்களுக்கு மேல் உண்மையை மறைத்து வைத்திருக்க அவளால்முடியவில்லை. உடனே அவள் மக்களிடம் சென்று "இந்த மகான் மீது நான் பழிசுமத்தியது என்னைத் துன்புறுத்துகிறது. என்னுடைய இழி செயலுக்கும் இவருக்கும் எவ்விதசம்பந்தமும் இல்லை" என்றாள். உடனே ஊர் மக்கள் ஞானியிடம் சென்று "எங்களை மன்னிக்கவேண்டும். இவளுடைய தவறுக்குப் பொறுப்பு நீங்களல்லீர். இவளை நாங்கள் அழைத்துக்கொண்டு போகிறோம்" என்றார்கள். "அப்படியா" என்று அதையும் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டார். ஊர் மக்கள் அவரைத் திட்டியபொழுதும், பிறகு அவர்கள் தங்கள் தவறை உணர்ந்து அவரிடத்தில் மன்னிப்புக் கேட்டபொழுதும் அவரது உள்ளத்தில் எவ்வித மாறுதலும் உண்டாகவில்லை. இகழ்ச்சியையும், புகழ்ச்சியையும் மகிழ்வோடு அவர் ஏற்றுக்கொண்டது அவர் எத்தகைய பண்பாடு அடைந்திருந்தார் என்பதைக்காட்டுகிறது. அவருடைய மனம் பரிபூரண நிலையில் இருந்ததாலும், தூய நிலையில் இருந்ததாலும் அவர் எல்லாச் சூழ்நிலைகளிலும் எவ்வித மாறுதலும்இன்றி மகிழ்ச்சியோடு இருந்தார். அத்தகையதூயநிலையை எட்டுவது வாழ்க்கையின் லட்சியமாகும். பிரபஞ்ச சம்பந்தமான இன்பங்கள் எல்லாம் நொடிப்பொழுதில் துன்பங்களாக மாறுகின்றன. தன் மயமாக இருக்கும் பொழுதே பேரானந்தம் கிட்டுகிறது. பேரானந்தந்தான் ஆத்மாவின் நிஜசொரூபம். இதனைத் தாயுமானவர் "போக்குவரவு இல்லாத இன்பமாய்" என்று பகர்கிறார்.

பரம்பொருள் பூரணப்பொருளாவார். ஜீவர்களாகிய நாம் பூரணர்களாவோம். பரம்பொருள் பிரபஞ்ச அதீதத்தில் இருக்கும் பொழுது பூரணமாக இருக்கின்றார். பிரபஞ்சமாக வடிவெடுத்திருக்கின்ற இந்நிலையிலும் அவர் பூரணமாக இருக்கின்றார். அவருடைய பூரணத்துக்கு எந்தநிலையிலும் குறை ஏற்படுவதில்லை. கடலில் நிலை குலைந்து இருக்கின்ற கப்பல் துறைமுகத்துக்குள் வருகிறபொழுது நல்ல பாதுகாப்பில் இருக்கிறது. அப்பொழுது கடலில் எவ்வளவு அலை வீசினாலும் கப்பலுக்கு உபத்திரவம் இல்லை. பூரண நிலையில் நிலைபெற்றிருப்பவர்கள் பரம்பொருள் சொருபம் ஆகிறார்கள். பூரணநிலை யாவர்க்கும்சொந்தம். அது நம்முடைய பிறப்புரிமை. அம்பிகைக்கு ஸ்ரீ சக்கரம் அமைப்பதுண்டு. ஸ்ரீ சக்கரத்துக்குள் முக்கோணங்கள் ஒன்றுக்குள் ஒன்றாக வரையப்பட்டிருக்கும். ஒவ்வொரு முக்கோணமும் தன்னளவில் பூரணமுடையதாக இருக்கிறது. பெரிய முக்கோணத்தில் சிறிய முக்கோணம் தன்னுடைய தனி வியக்தியை இழந்து விடாமல் இடம் பெறுகிறது. ஒரு சிறு பாத்திரம் நிறைய ஜலம் இருந்தால் அது பூரணமாகிறது. பெரிய பாத்திரம் நிறைய ஜலம் இருந்தால் அதுவும் பூரணம். பூரணகும்பம் வைப்பதற்குப் பெரிய பாத்திரத்தில் ஜலம் வேண்டுமென்பது இல்லை. சிறிய பாத்திரத்தில் நிறைய ஜலம் இருந்தால் போதும். பூரணகும்பத்திற்குப் பாத்திரத்தின் பருமன் முக்கியமானதன்று. பாத்திரத்தின் நிறைநிலைதான் முக்கியமானது. உள்ளத்தைப் பரிபூரண நிலை ஆக்குவோம்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் சாரதா தேவியாரை ஆட்கொண்டு ஷோடசி பூஜை செய்த நாள் முதல் உள்ளத்தில் ஆனந்தம் என்னும் பூரண

கும்பம் வைத்திருந்ததுபோன்ற மாருத நிலை சாரதாதேவியாரிடம் இருந்ததாக அவரே கூறி யுள்ளார். இந்த நிலை எல்லார்க்கும் பொது வானது. அந்நிலை பெற்று அதில் உறுதியுடன் நிற்பவர்கள் அடையவேண்டியதை அடையப் பெற்றவர்களாகிருர்கள். அந்நிலை அடைந்ததும் சாதனை பூர்த்தியாகின்றது. "நின் பூரணம் புகலிடம் அது ஆய்" என்கிருர் தாயுமானவர்.

இதுவரை பகரப்பட்டதெல்லாம் பரம்பொரு ளைப் பற்றிய பெரியநிலை ஆகும். ஈசனுடைய பஞ்ச கிருத்தியங்களுள் சிருஷ்டி, ஸ்திதி, சம் ஹாரம் ஆகியமூன்றும் பிரபஞ்சம்முழுவதற்கும் பொதுவானவை. திரோதானம் எல்லா உயிர் களிடத்திலும் இருக்கிறது. நாம் நம்முடைய யதார்த்த சொருபத்தை மறந்துவிட்டோம். இது திரோதானநிலை. நோயை உள்ளபடி அறிவது அந்த நோயைப் போக்குதற்கு உற்ற உபாயமாகும். ஜீவபோதம் பெற்றிருக்கும் நிலை யில் நாம் ஜீவர்களாக இருக்கின்ருேம். ஜீவ போதத்தை அகற்றிவிட்டால் நாம் பரம் பொருள் ஆகிவிடுவோம். சகோதரன் ஹரியும், சகோதரி பத்மாவும் தோட்டத்தில் விளையாடிக் கொண்டு இருந்தார்கள். அந்தத்தோட்டத்தில் அடர்ந்த புதர் ஒன்று இருந்தது. அண்ணன் ஹரி தங்கை பத்மாவின் காட்சியினின்று திடீ ரென்று மறைந்துவிட்டான். தங்கை பத்மா அண்ணனைத் தேடிக்கொண்டு இருந்த பொழுது புதருக்குள் இருந்து கரடி ஒன்று வந்தது. கரடியைக் கண்ட பத்மா பயந்து 'கோ' வென்று கதறி மூர்ச்சைபோட்டுக் கீழே விழுந்தாள். தன் விளையாட்டு வரம்பு கடந்து போய்விட்டதை அறிந்த அண்ணன் ஹரி தன் மேலே போர்த்தியிருந்த கரடித்தோலை அகற்றி ஞன். "ஓ! அண்ணுதாஞ இப்படி விளையாடி ஞய் !" என்று அண்ணன் ஹரியைப் பார்த் ததும் மகிழ்ச்சியோடு எழுந்து அருகில் ஓடி ஞள். ஹரி, பத்மாவோடு விளையாடியது போன்று பரம்பொருள் திரோதானத்தை உண்டுபண்ணி நம்மோடு விளையாடுகிருர். அந்த விளையாட்டில் ஈடுபட்டிருக்கும் நாம் சில தடவைகளில் பயப்படுகின்ருேம்; சில தடவை களில் மகிழ்ச்சி அடைகின்ருேம். இக்கருத்தை கவிதை ரசம் பொருந்திய பாங்கில் உபநிஷதம் பகர்கிறது. பிரபஞ்சம் என்னும் விருட்சத்தில் இரண்டு பறவைகள் உட்கார்ந்து இருக்கின் றன. மேலே உள்ள பறவை தன்னில் தாஞக நிம்மதியாக இருக்கிறது. கீழே உள்ள பறவை மரத்தில் உள்ள காய்களையும் கனிகளையும் மாறி மாறி உண்டு இன்ப துன்பங்களுக்கு ஆளாகிறது. துன்பப்படும் பொழுதெல்லாம் அது மேலே உள்ள பறவையைப் பார்க்கிறது. மேலே உள்ள பறவை நிம்மதியாக இருப் பதைப் பார்த்து அதன் அருகில் போவதற்காக அடுத்த கிளைக்குத் தாவுகிறது. பலதடவை அது துன்பத்திற்கு ஆளாகிறது. துன்பப்படும் பொழுதெல்லாம் "இந்தத் துன்பம்வேண்டாம். மேலே உள்ள பறவை போன்று அமைதியாக இருக்கவேண்டும்" என்று எண்ணி மேல் கிளைக்குத் தாவுகிறது. அப்படிப் பலதடவை கள் முயற்சி செய்து மேலே உள்ள பறவைக்கு அருகில் சென்று அதில் லயமாகிவிட்டது. இன்ப துன்பமான கனிகளை உண்ட பறவை ஜீவாத்மா. தன்னில்தான் இன்புற்றிருந்த பறவை பரமாத்மாவாகும். துன்பத்தின்மூல மாக ஜீவாத்மா பண்பாடு அடைகிறது. துன் பம் இல்லாவிட்டால் மனம் பண்படாது. மிதிலாபுரியிலிருந்து வந்த சீதை அயோத்தி யிலேயே இருந்திருந்தால் பண்பாட்டிற்கு இடம் இல்லாது போயிருந்திருக்கும். வன வாசத்தை அனுபவிக்கின்றபொழுது நேர்ந்த துன்பத்தைச் சீதை பொருட்படுத்தாது இருந் தாள். ரிஷிகளின் ஆசிரமங்களிலிருந்து வந்த நலன்களைச் சீதைஅனுபவித்தாள். மிகத்துக்க மான நிகழ்ச்சி சீதையின் வாழ்வில் உண்டா கிறது. இராவணன் சீதையைத் தூக்கிக் கொண்டு போய், அசோகவனத்தில் சிறை வைத்தான். சீதை பண்படுவதற்கு அது பொருத்தமான சூழ்நிலையாக அமைந்தது. அசோகவனத்தில் சிறை இருந்த சீதை இரா மனை நினைத்துக் கதறி அழுத அழுகையின் மூலமாக அவள் பண்பட்டு வந்தாள். அவ் வழுகையின் மூலமாக அவள் ஆத்ம சொருப மாக மாறி அமைந்தாள். "வினையேன் அழு தால் உன்னைப் பெறலாமே" என்பது கோட் பாடு. தங்கத்தைக் காய்ச்சுகின்ற அளவுதான் அது தூயதாகிறது. அங்ஙனம் நாம் இறை வனை நினைத்து உருகும் அளவுதான் நாம் தூய வர்களாகின்ருேம். (தொடரும்)

# ஏகாந்தம்

(சுவாமி ஆத்மானந்தர்)

"இனிது இனிது ஏகாந்தம் இனிது" என்பது கோட்பாடு. நீ அடிக்கடி ஏகாந்தத்தை நாடிச் செல். நம்மை நாமே அறிந்துகொள்ளுதற்கு ஏகாந்தவாசம் துணை செய்கிறது. உனது மனபரிபாகம் எத்தகையது? அதில் எத்தகைய எண்ணங்கள் புதைந்து கிடக்கின்றன? என்பதை ஏகாந்தவாசத்தில் நன்கறியலாம். தனித்திருந்து உனது உள்ளத்தைக் கவனித்துப்பார். தியானம் புரிவதும் ஒருவிதத்தில் தனித்திருந்து உன்னைக் கவனிப்பதும் ஒன்றேயாம். தனித்திருந்து பகவத் சிந்தனையில் மூழ்கியிரு. நாம் எவ்வளவுக் கெவ்வளவு பகவத் சிந்தனையில் ஊறியிருக்கின்றோமோ அவ்வளவுக்கவ்வளவு பகவான் நமது நெஞ்சகத்தினுள் இருப்பவராகின்ருர். ஓயாது தம்மை நினைப்பவரது மனத்தைத்தான் பகவான் தமக்குரிய கோயிலாகக் கொள்ளுகின்ருர். "ஓயாதே உள்குவார் உள்ளிருக்கும் உள்ளானை" என்பது திருவாசகம்.

மனதை மாசுபடுத்தும் புல்லிய சிந்தனைகளை ஒழித்துவிடு. வீண் விநோதங்களில் நாட்டம் கொள்ளாதே. மூளையைக் குழப்பி மனதைக் கெடுக்கக்கூடிய நூல்களை வாசியாதே. சிற்றின்ப இச்சையை வளர்க்கும் எதையும் இந்திரியங்களுக்கு உணவாக்காதே. உள்ளத்தைத் தூயதாக்கிப் பகவானிடத்து மேலும் மேலும் பக்தியை ஓங்கச் செய்யும் நூல்களை மட்டும் வாசி. எல்லாவற்றையும் அறிந்து கொள்ளவேண்டும் என்று ஆசைப்படாதே. அனைத்தையும் அறிதல் என்பது யாருக்கும் சாத்தியமன்று. அதிகமாகப் பேசாதே. நாவடக்கம் பழகிவா. தினமும் சிலமணிநேரமாவது பேசாதிருந்து பழகி வா. மௌனம் உள்ளத்தைத் தூயதாக்கி ஆத்ம சக்தியை வளர்க்க வல்லதாகும். இங்குமங்குஞ்சுற்றித்திரிய ஆசைப்படலாகாது. எந்தச் செயலையும் ஆத்திரப்படாது அமைதியாக இயற்று. ஆனல் சோம்பலுக்கு இடம் தந்துவிடாதே. சோம்பேறி உலக வாழ்விலேயே தோல்வியடைந்து விடுவான். பொருட்செல்வத்தையே அவனல் பெற இயலாது. அத்தகைய ஒருவன் அருட்செல்வத்தைப் பெறுவதெங்ஙனம்? மிதூண் விரும்புதல் சோம்பலை வளர்க்கிறது. உண்ணுதற்காக உயிர் வாழவில்லை; உயிர் வாழ்வதற்காகவே உண்ணுகின்ரோம். புலன்களுக்கு அடிமைப்பட்ட வாழ்வு மிருக வாழ்வைத் தவிர வேறென்ன? தெய்வமாக வாழத்தான் மனிதனுகப் பிறந்திருக்கின்ரோம். தெய்வீக வாழ்வு வாழ்ந்து, தெய்வத்தோடொன்றுபடுவது மானுட வாழ்க்கையின் லக்ஷியம்.

ஆத்மசாதகன் உலக விஷயங்களில் மிகுதியாகக் கவனம் செலுத்தலாகாது. பட்டம், பதவி, பேர், புகழை நாடலாகாது. வீண் பேச்சுப் பேசுதலையும், வீண் பேச்சுக்குச் செவி சாய்ப்பதையும் தவிர்க்கவேண்டும். உலக விஷயங்களை மிகுதியாகக் கேட்கின்ற அளவுக்கு நமது மனது சஞ்சலம் அடைகின்றது. பிறரிடத்துக் குறைகாண முற்படுவது மானுட இயல்பு. பிறர் குற்றம் கூறுவது சாதாரணமாக மனதுக்கு உகந்த செயலாகும். ஆனல், சாதகன் இந்தக் குற்றத்துக்கு ஆளாகாது பார்த்துக்கொள்ளவேண்டும். உண்மையான சாதகனுக்குப் பிறரிடத்துக் குறைகாண நேரமிராது. மக்களுள் பலர் ஜபதபம் பண்ணுதற்கு நேரமில்லை என்கின்றனர். ஆனல், ஊர் வம்பு பேசுதற்கு அவர்களுக்கு எப்படியோ நேரம் கிடைத்து விடுகிறது. உண்ணுதற்கும் உறங்குதற்கும் நேரமில்லையென்று யாரும் சொல்வதில்லை. தினந்தோறும் மூன்று வேளை உண்ணுதற்கும், உறங்குதற்கும் என்று எட்டு மணிநேரம் ஒதுக்குதற்கு யாரும் தவறுவதில்லை. ஆனல் இருபத்து நான்கு மணி நேரத்தில் ஜபதபம் செய்வதற்கென்று அரைமணி நேரம் ஒதுக்க இயலவில்லையென்கின்றனர். இது மனிதனிடத்துள்ள சிரத்தை இன்மையையும், சோம்பலையும், அசட்டுத் தனத்தையுமே காட்டுகிறது. மனிதன் வீண் காலம் போக்குவதை விட்டுவிடுவானகில் அவனுக்குச் சாதனை புரிவதற்கு வேண்டிய நேரம் கிடைக்கும். நாள்தோறும் பல மணி நேரங்களை வீண் பேச்சுப் பேசியே கழித்து விடுகின்றனர். எவ்வளவுக்கெவ்வளவு இலௌ

கீக மாந்தரது தொடர்பைக் குறைத்துக் கொள்ளுகிறோமோ அவ்வளவுக் கவ்வளவு ஆத்மசாதனத்துக்கு அவகாசம் கிடைக்கும். அனுபூதிமான்கள் லௌகீகரது தொடர்பை அரிதாகவே வைத்திருந்தனர். அவர்கள் தங்கள் வாழ்நாளை ஏகாந்தத்திலேயே கழித்தனர். அவசியம் ஏற்படும்போது மாத்திரமே மாந்தரது தொடர்பை ஏற்படுத்திக்கொண்டனர்.

உலகத்தவருடன் இணக்கம் வைக்கும் பொழுதெல்லாம் நான் மலினமடைந்தேன் என்கிறார் சான்றோர் ஒருவர். உலகத்தவரது இணக்கம் சாதகனைப் பந்தபாசத்தில் கட்டிப் பிணிக்கிறது. ஆரம்ப சாதகன் லௌகீகர்களுடன் நெருங்கிய சகவாசம் வைத்துக் கொள்ளலாகாது. ஒரு மனிதன் யாருடன் நெடுநாள் பழக்கம் வைக்கின்றானோ அவனை அறியாமல் அந்த மனிதனது இயல்பு அவனுக்கு வந்துவிடுகிறது. நீரின்மேல் எண்ணெய் மிதக்கும் என்றாலும் நெடுநாட்களுக்குப்பின் அவ்விரண்டும் கலந்து துர்நாற்றம் எடுக்கத் தொடங்கிவிடும். ஆதலால் சாதகன் உலகாயதர்களுடன் அளவுக்கு மிஞ்சி நெருங்கிப் பழகலாகாது.

கண்டவர்களுடனெல்லாம் மிதமிஞ்சிப் பேசுபவர் தங்களுக்குத் தாங்களே அவமானத்தைத் தேடிக்கொள்கின்றனர். மனிதர்களுக்கு மத்தியில் தன்னை மேலானவன் என்று விளம்பரப்படுத்த விரும்புவதைவிட, அறையில் அமைதியாய்த் தனித்திருப்பது மேலானது. பெயர் புகழுக்கு ஆசைப்பட்டு மக்களுக்கிடையில் செயல் புரிவதைவிட, ஆண்டவனை நினைந்த வண்ணம் தனிமையில் இருப்பது மேலானது. ஆன்மீக நாட்டமுடையவன் உலக இடைஞ்சல்களினின்று விலகி ஏகாந்தத்தை நாடிச்செல்லவேண்டும். தனிமையில் இனிமை காணாதவன் தன்னைக் குற்றமற்றவனாக்கிக் கொள்ளமுடியாது. நாவடக்கம் பயிலாதவன் பிறரது தூற்றுதலுக்கு ஆளாவான். பணிவற்றவன் எவனும் மேலாம் தகுதியைப் பெறத்தகுந்தவனல்லன். முதலில் கீழ்ப்படியக் கற்றுக் கொள். பின்னர்த் தலைமை தாங்கும் தகுதி உன்னை வந்தடையும். கனிகள்நிறைந்த கிளை தாழ்ந்து கொடுக்கின்றது. கனியற்ற கிளையோ நிமிர்ந்து நிற்கின்றது. அறிவுமிகுந்த சான்றோர் யாண்டும் பணிவுடையராய் இருக்கின்றனர்.

பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து

என்பது மறைமொழி.

அமைதியும் இனிமையும் நிறைந்த வாழ்வு வாழத் தூயமனம் பெற்றிருத்தல் அவசியம். துன்பங்கள் அனைத்திற்கும்,துயரங்கள் அனைத்திற்கும் மனத்தூய்மை இன்மைதான் காரணம். ஆசாபாசங்கள், கோபதாபங்கள் நிறைந்த மனம் தூய்மையற்றதாக இருக்கின்றது. உலகம் சஞ்சலமுடையது. ஆதலால், உலகப்பற்று நிறைந்த மனமும் சஞ்சலமுடையதாகத்தானிருக்கும். பரம்பொருள் அசையாப்பொருள். எங்கும் நீக்கமற நிறைந்த நிறைபொருள். அதனால் பரமனை நாடும் மனதும் நிறை மனதாகிறது. அத்தகைய மனதுக்கு அமைதியும் சாந்தியும், பேரானந்தமும் சொந்தம். அமைதியான மனமே ஆனந்தத்தின் உறைவிடம். ஆன்மீக வாழ்வு அமைதியையும், சாந்தத்தையும், பேரின்பத்தையும் நல்குகிறது.

நிர்விகல்ப சமாதி அடைந்தாலன்றி அகங்காரம் அடியோடு நசித்துவிடாது. ஜனங்களது பாராட்டுதலையும், பொருளற்ற புகழ் மொழிகளையும் கேட்டு ஆனந்தமுறலாகாது. தான் சாதனத்தில் மகோன்னத நிலையை அடைந்துவிட்டதாகவும், தனக்கு வீழ்ச்சி யென்பது இனி இல்லை யென்றும் கருதி விடலாகாது. மனோநாசம் ஆகும் பரியந்தம் மனிதன் எப்பொழுது வேண்டுமாயினும் வீழ்ச்சியுறலாம். மாயையின் ஆதிக்கம் வலிமை வாய்ந்ததாகும். ஆதலால், சாதகன் யாண்டும் விழிப்புடனிருக்க வேண்டும். துன்ப துயரங்கள் நம்மைப் பக்குவப்படுத்துகின்றன. ஆதலால் அவைகளைப் புறக்கணிக்க முற்படாதே. உனக்கு நீயே துணை செய்துகொள். துன்ப துயரங்கள் வரும்போது இறைவனைக் குறித்துப் பிரார்த்தனை செய். தெய்வத்தைக் குறித்துச் செய்கின்ற பிரார்த்தனை நம்மைத் தூயவர்களாக்குகிறது.

மாந்தரது துணையைக்காட்டிலும் பகவானது துணை அளப்பரியது. யாண்டும் பகவானையே நம்பியிரு. அவர் ஒருவரே இன்பத்திலும் துன்பத்திலும், வறுமையிலும் செழிப்பிலும், இருளிலும் ஒளியிலும், உறக்கத்திலும் விழிப்பிலும், இம்மையிலும் மறுமையிலும், பிறப்பி

லும் இறப்பிலும் உற்றதுணையாயிருப்பவர். உலகப் பொருட்களைத் தேடும் பொழுது மனது மாசடைகின்றது. உலக விஷயங்களில் அதிகக் கவனம் செலுத்தாதே. உலகத்தினின்று இன்பம் பெற நினையாதே. வீண் கவலைகளை யெல்லாம் ஒழித்துவிடு. மனக்கோட்டை கட்டுவதையும் விட்டுவிடு. இதைச்செய்யவேண்டும்; அதைச் செய்யவேண்டும் என்றெல்லாம் திட்டமிடாதே. பகவான் இடுகின்ற பணியைப் பகவானுக்காகவே செய்துவா. கரங்களைக் காரியங்களுக்கும், மனதைக் கடவுளுக்கும் அர்ப்பணித்துவிடு. அவன் ஒருவனிடத்தில் மட்டுமே முழு நம்பிக்கை வை. ''கடவுளை நம்பினோர் கைவிடப்படார்'' என்பதை யாண்டும் நினைவில் கொள்.

சிரத்தையோடு சாதனத்தில் ஈடுபடாதவன் இறையருளுக்குப் பாத்திரமாக மாட்டான். தாகம் நிறைந்தவன் தடாகத்தை நோக்கி ஓடுகிறான். அருள்தாகம் பிடித்தவன் ஏகாந்தத்தை நாடி ஓடுகிறான். உலகத்தோடு தொடர்பு வைக்கும் பொழுதெல்லாம் மனிதன் மனவமைதியை இழந்து விடுகிறான். தனித்திருக்கும் போதே இழந்த அமைதியை மீண்டும் அடையப்பெறுகிறான். இளமையிலிருந்தே தனிமையில் இனிமை காணும் இயல்பு ஒருவனுக்குக் கிட்டிவிட்டால் அவன் பாக்கியவான். அவனுக்கு நண்பர்களோ, செல்வங்களோ தேவையில்லை. அத்தகையவன் தனக்குத் தானே நண்பனாகின்றான். அவன் தன்னிடத்திலேயே இன்பம் காணுகின்றான். இன்பம் என்று மானுடன் கற்பனை செய்வதெல்லாம் உண்மையில் உலகில் இல்லை. அகத்தில் இருப்பதைத்தான் அறியாமையினால் மாந்தர் புறத்தில் தேடுகின்றனர். புறவுலகம் இன்பத்தை மாந்தர்க்கு ஒருபோதும் தராது. இன்பத்தின் உறைவிடம் ஆன்மா. அதுதான் நம்முடைய நிஜஸ்வரூபம். தூயமனம் படைத்தோர் ஆன்மாவில் இன்பம் காணுகின்றனர். ஆசைகளையெல்லாம் அடியோடு அகற்றியவன் ஆத்மானந்தத்தை அனுபவிக்கிறான். ஆத்மானந்தத்திற்கு நிகரான ஆனந்தமோ, ஆத்மாவில் ஆத்மதிருப்தனாய் இருப்பதற்கேற்ற ஏகாந்தமோ வேறெதுவும் கிடையாது.

பகவானிடத்துப் பக்தி பெருகப் பெருக விவேகம் உதயமாகிறது. சாஸ்திரங்களின் உட்பொருள்களெல்லாம் நன்கு விளங்குகின்றன. ஆன்மார்த்த சம்பந்தமான ஐயங்களெல்லாம் தாமாக அகன்றுவிடுகின்றன. உலகப் பற்றுக்கள் ஒவ்வொன்றாய் நழுவி விடுகின்றன. தெய்வப் பற்று மேலும் மேலும் ஓங்குகிறது. உலகைத் துறந்தவன் இறைவனுக்கு மிக நெருங்கிய சொந்தமாகிறான். உடைமைகள் சாதனத்துக்கு இடையூறு விளைவிப்பனவாகும். சாதகனுக்கு அவனுடைய உடலே ஒரு பெரிய உடைமையாக இருக்கிறது. இந்த உடற் சுமை போதாதென்று வேறு உடைமைகளைத் தேடிக்கொள்வானேன்? உடைமைகள் அற்றவனாய் இரு. யான் எனது என்னும் இருமைகளைக் கடந்து நில். பந்த பாசங்கள் அற்றவனாய், உலகப் பொருட்கள் அனைத்திடத்திருந்தும் மனதை மீட்டெடுத்து ஆண்டவனிடத்தில் மட்டுமே வை. ஐம்புலன்களையும் அடக்கி வைத்திரு. நீ அனுமதி தந்தாலன்றி அவைகள் செயல்படலாகாது. பார்க்க அனுமதித்தால்தான் கண்கள் பார்க்கவேண்டும். கேட்க அனுமதி தந்தால்தான் செவிகள்கேட்க வேண்டும். இப்படியே ஏனைப் புலன்களும் அனுமதி தந்தாலன்றி அவைகள் தம் தம் தொழில்களில் ஈடுபடலாகாது. நீ எதை உன்னோடு வைத்துக்கொள்ள விரும்பவில்லையோ அதைப் பார்க்கவும் விரும்பாதே. நீ எதைப் பார்க்க விரும்பவில்லையோ அதைப் பற்றிக் கேட்கவும் விரும்பாதே. ஆத்ம சாதனத்துக்கு இடையூறு விளைவிக்கும் அனைத்தையும் உனது மனத்தகத்தினின்று அடியோடு அகற்றிவிடு. திரிகரணங்களையும் அவற்றிடத்திருந்து மீட்டெடுத்துக்கொள். பூவுலகில் எதுவுமே உனக்கு இன்பம் தராது. உலகமும் அதினின்று அடையப்பெறுகின்ற சுகானுபவங்களும் அழிந்து போகக்கூடியவை. இந்திரியங்கள் உன்னைப் பலவந்தமாகப் பற்றியிழுக்கும் தன்மையன. இந்திரியங்களைத் தன் வசமாக்கிக் கொள்ளப் புறவுலகம் யாண்டும் தயாராய் இருக்கின்றது. இந்திரிய இன்பத்துக்கு அடிமைப்படுபவன் தொடக்கத்தில் ஏதோ அற்பசுகத்தை அடைகிறான். ஆனால் முடிவிலோ மனக்கலக்கமும் துக்கமும் அடையப் பெறுகிறான். இன்பமாகத் தொடங்கி

துன்பமாக முடிவடைவது தான் இந்திரிய இன்பத்தின் போக்கு. உலகப்பொருட்கள் அனைத்தும் பஞ்ச பூதங்களால் ஆனவையே. உனது சரீரமும் பஞ்சபூதங்களாலானது. பூத சரீரத்தைக்கொண்டு பூதங்களினால் ஆன பொருட்களில் இன்பந்தேடுவதை விட்டுவிடு. பஞ்ச பூதங்கள் போக்கு வரவுடையவை. போக்குவரவற்றவன் இறைவன். இறையின்பமோ போக்குவரவற்றது. அதனை நாடுவதே ஆத்மசாதனமாகும்.

மண்ணுலகில் மறைந்துபோகாது நிலைத்திருக்கக்கூடிய பொருள் எதுவும் இல்லை. தோன்றியன அனைத்தும் அழிந்துபட்டுப் போம். உலகப் பொருட்களிடத்திருந்து நிம்மதி கிடைப்பதாய் சிலசமயம் தோன்றலாம். ஆனால் அந்த எண்ணம் நெடுநாட்கள் நிலைத்திராது. உலகப் பொருட்கள் அனைத்தையும் அடையப் பெற்றாலும் அவை யாவும் வெறும் கனவேயாம். உலகப்பொருட்களைத் தேடுவதை விட்டுவிடு. பகவானிடத்துப் பக்தியை வளர்க்கப் பாடுபடு. இவ்வளவு நாட்கள் வீணாயின. அவை போதும்; மேலும் காலத்தை வீணாக்காதே. காலம் உனக்காகக் காத்திராது. அது ஓடிக்கொண்டே இருக்கிறது. நாள்தோறும் மரணம் உன்னை நெருங்கிக்கொண்டே இருக்கிறது. பக்தியைப் பெருக்குவதில் கவனமாய் இரு. பக்தியொன்றே இவ்வுலகில் நித்தியமானது. ஏனைய யாவும் அநித்தியமே. ஏகாந்தத்தை நாடிச் செல்; அல்லது உனது அறையின் கதவை மூடிக்கொண்டு அதனுள் தனித்திருந்து இறைவனைப் பிரார்த்தித்துக்கொள். உலகத்தவர் காட்சியினின்றும் யாண்டும் உன்னை நீ விலக்கிக்கொள். ஆனால் ஆண்டவனோடு யாண்டும் உன்னை நீ இணைத்துவை. உனது இதயம் இறைவன் கோயிலாகட்டும்.

பூவுலகில் இன்பத்தைத் தேடுகிறாயா? பூவுலகில் இன்பத்தை நீ காணப் போவதில்லை. மண்ணுலகெங்கும் துன்பமும் துயரமும் தாண்டவமாடுவது உன் கண்களுக்குத் தென்படவில்லையா? பூவுலகில் இன்பத்தைத் தேடாதே என்று சான்றோர் சாற்றியது உனது செவிகளில் விழவில்லையா? துன்பத்தின் உறைவிடம் இவ்வுலகம். இருமைகளின் இருப்பிடம் இவ்வுலகம். அதனால்தான் ஞானவான்கள் இவ்வுலகைத் துறந்து ஏகாந்தத்தை நாடி ஓடினர். தனிமையில் இனிமை காணுவது எவ்வளவு மேலானது! அயர்ந்த உறக்கத்தில் அதனை ஓரளவு நாம் அனுபவிக்கிறோம். இறைவனோடு ஐக்கியப்பட முயல்வதில் எத்துணை ஆனந்தம் இருக்கின்றது! இறைவனை அடைதற்பொருட்டு அனைத்தையும் துறந்து விடுவதில் ஒரு தனியின்பம் இருக்கிறது. உடைமைகள் என்பன ஏதும் அற்றவனாய், பந்தபாசம் என்பது சிறிதேனும் இல்லாதவனாய், இருமைகள் அனைத்திற்கும் அப்பாற்பட்டவனாய் இருந்துகொண்டு சதா இறையின்பத்தில் திளைத்திருக்கும் இன்பத்திற்கு ஈடு இணையேது? அந்தப் பேரானந்தத்தை அடையவிரும்பினால் பகவானின் பொருட்டு அனைத்தையும் துறந்துவிட வேண்டும். உற்றார் உறவினர், வீடு வாசல், பேர் புகழ், செல்வம்சுகபோகம், ஆசாபாசங்கள், கோபதாபங்கள் அனைத்தையும் துறந்துவிட வேண்டும். உலகின் மத்தியில் நீ வாழ்ந்திருந்த போதிலும் உனது இதயத்தில் இறைவனோடு மட்டும் வாசம் செய். ''நெஞ்சம் உமக்கேஇடமாக வைத்தேன்; நினையாது ஒரு போதும் இருந்தறியேன்'' என்பதற்கேற்ப உனதுஇதயத்தை முற்றிலும் இறைவனுக்குரியதாக்கிவிடு. உனது இதயத்தில் வேறு யாருக்கும், வேறு எந்தப்பொருளுக்கும் இடமளிக்க வேண்டாம். உயிரோடு இருப்பதற்கிடையில் உலகத்திற்கு நீ செத்தவனைப் போன்று ஆகிவிடு. இருந்தும் இல்லாதவனைப்போல் உன்னை நீ ஆக்கிக்கொள். அதாவது, உனது ஆசாபாசங்கள், காமக்குரோதாதிகள், கர்மங்களனைத்தும் பிணத்தினிடத்துப் போன்று நசித்துப் போகட்டும்.

या निशा सर्वभूतानां तस्यां जागर्ति संयमी ।
यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः ॥

''உயிர்கள் அனைத்துக்கும் எது இரவோ அதில் யோகி விழித்திருக்கிறான். உயிர்களெல்லாம் துய்த்துணரும் நிலை தத்துவ ஞானிக்கு இரவு'' என்பது கீதா போதனை. இப்பெருநிலையையடைவதே நமது லக்ஷியமாக இருக்கட்டும்.

---

# திருவிளக்குப் பூஜை

(சுவாமி ஸதானந்தர்)

நவராத்திரி சமயத்தில் நம் நாட்டில் கொலு வைப்பதும், தீப அலங்காரங்கள் செய்வதும், திருவிளக்குப் பூஜை செய்வதும் வழக்கம். வீட்டிலேயே இருக்கும் பெண்களுக்கு உற்சாகம் தருகிற முறையிலும், அவர்களது கலை அறிவை வெளிப்படுத்த சந்தர்ப்பம் தருகிற முறையிலும், ஒருவர்க்கொருவர் கலந்து பழகி, தம்தம் இல்லங்களுக்கு மற்றவர்களை அழைத்து உறவாடி பரஸ்பரம் அன்பையும் ஒற்றுமையையும் வளர்க்கிற முறையில் நவராத்திரி விழாவை நம் பெரியோர்கள் அமைத்துள்ளார்கள். இவையெல்லாம் வெறும் பகட்டாகவும், ஆடம்பரமாகவும், விளையாட்டாகவும், போய் விடலாகாது என்பதைக் கருத்தில் வைத்தவர்களாய் அதைக் கடவுள் வழிபாடாக, அம்பிகைவழிபாடாக அமைத்தார்கள். கடவுள் வழிபாட்டில் மனது திரும்புமளவு பகட்டும், ஆடம்பரமும், ஆணவ அகங்காரமும் பின்னணிக்குப் போய்விடுகின்றன. செய்கிற காரியம் நமக்கும் மற்றவர்களுக்கும் நல்ல பிரயோஜனம் உள்ளதாக அமைகிறது. இதை நாம் கருத்தில் வைக்கவேண்டும்.

திருவிளக்குக் கடவுளின் சின்னமாய், மங்களமானதாய், நமக்கு நலம் தருவதாய், புனிதமானதாய்க் கருதப்படுகிறது. கடவுள் ''பாரோர் விண்ணோர் பரவி ஏத்தும் பரனே, பரஞ்சோதி,'' ''சிவபுரநகர்புக்குக் கடியார் சோதி கண்டு,'' ''அளப்பரும் சோதி,'' ''எங்கும் பிரகாசமாய்,'' ''விண்ணும் நிலனும் தீயானுய் போற்றி,'' ''மெய்ஞ்ஞானமாய் மிளிர்கின்ற மெய்ச்சுடரே'', ''ஒளிவளர் விளக்கே'', ''செழுஞ்சுடரே, செழுஞ்சுடர் நற்சோதி மிக்க உருவே'',''ஜோதி வானவன்,''''திருவையாறு அகலாத செம்பொற்ஜோதி'',''தேனைப்பாலைத் திகழ் ஒளியை'' என்று பக்தர்களால் துதிக்கப் படுகிறார். கடவுள் ஜோதி வடிவில் தோன்றினார் என்று புராணம் பல இடங்களில் வருணிக்கிறது. திருவிளக்குக் கடவுள் வழிபாட்டிற்கு எப்படிப் பொருத்தமான சின்னமாய் அமைந்துள்ளது என்பதை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஞானம், அறிவு, புத்தி இவைகளுக்கு உதாரணமாய், சின்னமாய் வெளிச்சம், விளக்கு, தீபச்சுடர் இவைகள் சொல்லப்படு கின்றன. வெளிச்சம் இல்லாமல் உலக காரியங்கள், நடமாட்டம், எவையும் சாத்தியமில்லை. அது போலவே அறிவு என்னும் விளக்கு இன்றி நாம் மாண்புடையவர்களாக, நல்லவர்களாக, சீலமுடையவர்களாக நடந்துகொள்ள முடியாது. நம் வாழ்க்கையைச் செம்மைப்படுத்துவதற்கு, தெய்வீக வாழ்வு ஆக்குவதற்கு அறிவு அவசியம். 'தமஸோ மா ஜ்யோதிர் கமய' என்று நாம் இறைவனைப் பிரார்த்திக்கிறோம். இருளிலிருந்து ஒளிக்கு அழைத்துச் செல் என்பது அதன் பொருள். புறத்தில் இருள் என்று சொல்லுவது அகத்திலுள்ள அக்ஞானத்தைக் குறிக்கிறது. புறத்தில் ஒளி என்று சொல்லுவது அகத்திலுள்ள ஞானத்தைக் குறிக்கிறது. 'தேஜோஸி, தேஜோமயி தேஹி.' நீ தேஜஸ்; எனக்குத் தேஜஸைக் கொடு என்று இறைஞ்சுகிறோம். God is light, kindly lead me to the light என்பது கிறிஸ்துவின் வாக்கியம். இறைவன் அறிவு சொரூபி. ஞான சொரூபி ஆகையால் இறைவன் சொரூபமாகத் திருவிளக்கை வைத்து அறிவை விளக்கமுறச் செய். அறிவு சுத்த அறிவாகி உன்னையே நாடுவது ஆக வேண்டும் என்று பிரார்த்திக்கிறோம்.

காற்றில்லாத இடத்தில் திருவிளக்கின் சுடர் சித்திரத்தில் எழுதப்பட்டதுபோன்று ஆடாது அசையாது எரிகிறது. நாம் தியானம் செய்யும் போது மனது அங்ஙனம் ஆடாது, ஓடித் திரியாது இறைவன் உணர்விலேயே முழுதும் நிலைபெற்றிருக்க வேண்டும் என்பதற்கு உதாரணமாய் விளக்கின் சுடர் சொல்லப்படுகிறது. ஹிருதயத்தில் ஜோதி சொரூபமாய் இறைவன் எழுந்தருளியிருக்கிறார் என்று பாவித்து நாம் தியானிக்கவேண்டும் என்று புகட்டப் படுகிறது. இறைவனை ஜோதி சொரூபமாகப் பாவிப்பதற்கும். மனதை ஏகாக்கிர நிலையில் நிலைபெறச்செய்வதற்கும் திருவிளக்கு உயர்ந்த சின்னமாகத் திகழ்கிறது. திருவிளக்குப் போன்று நமது மனது ஏகாக்கிர நிலையில் நிற்க

வேண்டும், பாவனை திடமானது ஆக வேண்டும்.

மேகமானது தன் சொருபத்தில் ஒன்றுமே மிச்சம் வைக்காமல் உலகுக்கு அமிர்த வர்ஷமாகப் பொழிந்து விடுகிறது. அதேபோல் தீபமும் அகலில் எண்ணெய் இருக்கும் பரியந்தம், திரியில் எண்ணெய் இருக்கும் பரியந்தம், எரிகிறது; பிறகு திரியும் எரிந்துகருகிப்போகிறது; தன் சொருபத்தை இழந்து அது முடிவுறுகிறது. குடும்பத்தில் தாய் அப்படி வாழ்ந்து வருகிறாள். விசுவேசுவரனாகிய கடவுள் அங்ஙனம் தியாகராஜனாக, நீலகண்டனாக, சந்திரசேகரனாக வாழ்ந்துகாட்டுகிறார். உலகுக்கு அனைத்தையும் தந்து வாழ்ந்து வருதலை விடப் பெரிய ஆத்மசாதனம், கடவுள் வழிபாடு ஏது? திருவிளக்கு யச்ஞசொரூபம். அது புகட்டும் பாடங்களில் தலை சிறந்தது இதுவே.

தீபச்சுடர் மேல்நோக்கிய வண்ணம் எரிந்து கொண்டிருக்கிறது. அதுபோல எண்ணங்கள் எப்போதும் மேலானவைகளாக இருக்கவேண்டும். சுயநல சம்பந்தமான எண்ணங்களெல்லாம் கீழான எண்ணங்களாகின்றன. உலக நலனைக் குறித்து எண்ணும் எண்ணங்கள் மேலாம் எண்ணங்களாகின்றன. தெய்வீக எண்ணங்களே தலை சிறந்த எண்ணங்களாகின்றன. மனம் தெய்வீக எண்ணங்களில் ஈடுபட்டிருக்குமாகில் அது யாண்டும் மேலாம் நிலையிலிருப்பதாகிறது. தீபச்சுடர் மேல் நோக்கி எரிவது நம் மனம் தெய்வீக எண்ணம் என்னும் உயர்ந்த எண்ணத்தில் போய்க் கொண்டிருக்கவேண்டும் என்பதைக் குறிக்கிறது. எண்ணெய் இருக்கும் பரியந்தம் தீபம் எரிகிறது. அதுபோலபிராரப்தம், வினைப்பயன் என்னும் எண்ணெய் இருக்கும் பரியந்தம் ஜீவிதம் நடந்தாக வேண்டும். அது தீராத வரை பிறப்பு, இறப்பும் தீராது. திருவிளக்கு இறைவன் பொருட்டே எரிந்து தீர்வது போன்று இறைவன் பொருட்டே உலகில் வாழ்ந்து வினையைத் தீர்த்தல் பெரிய பாக்கியமாகும். இறைவன் ஆட்டுவித்த பிரகாரம் ஆடி, எல்லாச் சூழ்நிலையிலும் இறைவன் நினைவிலேயே வாழ்ந்தால் அது சிறந்த ஆத்ம சாதனம் ஆகிறது. இறைவனுக்கு 'வினைதீர்த்தாரப்பன்' என்றபெயர் உண்டு. நச்சினர்க்கினியன், பக்தவத்ஸலன் என்னும் பெயர்களும் இறைவனுக்கு உள்ளன. எப்படிப்பட்ட வினை உடையவனாக இருந்தாலும் இறைவனை நாடினல் அது நல்லதாக மாறிவிடும், அவனருளால் அவன் தாள் வணங்கி வினை தீரப்பெறலாம்.

பஞ்சபூதங்களால் ஆனது இப்பிரபஞ்சம். இவ்வுடலும் மற்றெல்லாப் பிரபஞ்சப் பொருள்களும் பஞ்சபூதங்களால் ஆனவை. மானுட வாழ்வின் குறைகளை நீக்க மனதை இறைவழிபாட்டில் ஈடுபடச் செய்தலே சிறந்த வழியாகும். இறை வழிபாட்டில் பஞ்சபூதப் பொருள்களும் உபயோகப்படுத்தப் படுகின்றன. பூ, துளசி, அறுகு, சந்தனம் முதலியன பிரகிருதி அல்லது பூமியின் அம்சங்களாகும். தூய நன்னீர் பூஜையில் பயன் படுத்தப்படுகிறது. திருவிளக்கு அக்னியின் அம்சம். தூபம், ஊதுபத்தி இவைகள் வாயுவின் அம்சங்களாகப் பாவிக்கப்படுகின்றன. நாம் யாண்டும், ஆகாசம்அல்லது வெளியில் அடங்கியவர்களாக வாழ்ந்து வருகிறோம். பஞ்சபூதங்களைப் பஞ்சலிங்கங்களாக வைத்து வழிபடும் பழக்கத்தை நம் முன்னோர்கள் அமைத்துள்ளார்கள். காஞ்சியில் பிருதுவியை லிங்கமாகவும், திருவானைக்காவலில் அப்புவை லிங்கமாகவும், திருவண்ணமலையில் அக்னியை லிங்கமாகவும், காளஹஸ்தியில் வாயுவை லிங்கமாகவும், சிதம்பரத்தில் ஆகாசத்தை லிங்கமாகவும் வைத்துப் பஞ்சபூதங்களை வழிபட்டு வருகின்றோம். இப்படிப் பஞ்சபூதப் பொருள்களைப் பயன்படுத்தி வாழ்வை இறைவன் மயம் ஆக்குகிறோம். தீப வரிசை கண்ணுக்கு அழகான இனிய காட்சியாகிறது, அது அமைதியாக எரிந்து, தன் பணியையாற்றுகிறது. இதை முன்னிட்டு அது தாய், அம்பிகை சொருபமாகவும் கருதப்படுகிறது. இத்தகைய குணநலன்களை எல்லாம் திருவிளக்கு வழிபாட்டில் அமைத்து வைத்திருக்கிறார்கள். அக்குண நலன்களைத் திருவிளக்குப் பூஜை வழிபாட்டின் மூலம் நாம் பெறுவோமானல் அது சிறந்த பூஜாபலன் ஆகும். பாமரமக்களுக்குச் சிறந்த வாழ்க்கை முறையைக் கிரியைகளின் மூலமாகத்தான் அமைத்துத்தர முடியும். மக்களைப் பண்படுத்தும் கிரியைகளுள் திருவிளக்குப் பூஜையும் ஒன்றாகும்.

# அஹிம்ஸை

தெய்விகப் பண்புகளுள் அஹிம்ஸை ஒன்ருகும். எந்த உயிர்க்கும் துன்பம் இழைக்காத பண்புக்கு அஹிம்ஸை என்று பெயர். அஹிம்ஸையைப் பற்றிப் பலர் பலவித அபிப்பிராயங்கள் கொண்டிருக்கிருர்கள். ஒருவருடைய புறச்செயலைப் பார்த்து அவரை அஹிம்ஸாமூர்த்தி என்று சொல்லிவிட முடியாது. தன்னைப்போன்று பிறர் அனைவரையும் நேசிக்கும் தன்மையுடையவரை அஹிம்ஸாமூர்த்தி என்று சொல்லலாம். தன் உடலில் தேவையில்லாத உறுப்பு ஏதாவது தோன்றிவிட்டால் அதை அறுத்துத் தள்ளுகின்ற செயலில் ஒருவன் ஈடுபடுகின்ருன். அவன் அந்த உறுப்பை அறுப்பதை முன்னிட்டு அவனை ஈவு இரக்கம் அற்றவனென்ரே, கொலைபாதகன் என்ரே சொல்லிவிட முடியாது. தன் உடலின் நலத்தை முன்னிட்டு வேண்டாத உறுப்பை மகிழ்ச்சியோடு இழக்க அவன் ஆயத்தமாக இருக்கிருன். அவனுடைய புறச்செயல் கொடுமையுடையதாகத் தென்படினும் உள்ளத்தில் அவன் உடல் நலம் கருதியவனுகின்ருன். அங்ஙனம் சமுதாய நலனில் நாட்டம் உடையவன் சமுதாய நலனுக்கு இடையூறு விளைவிக்கும் உயிர்களை அழித்துவிடும் செயலில் ஈடுபடுகிருன். அவன் புறச்செயல் கொடியது எனினும், அகத்தில் அவன் நலமே வடிவெடுத்தவனுகவிருக்கிருன்.

அகத்தைத் திருத்தியமைப்பதற்குச் சில கொடுமையான செயல்களும் பயன்படுகின்றன. அர்ஜுனனுடைய மனதைத்திருத்துவதற்குப் போர் புரிதல் என்ற செயலைச் செய்யும்படி கிருஷ்ணன் தூண்டுகிருன். சமுதாய நலனை முன்னிட்டுப் பாரதப்போர் நிகழ்வது அவசியமாயிற்று. புறத்தோற்றத்தில் அது கொடுமை எனினும் அதில் சமுதாய நலன் அடங்கியிருந்தது. ஆகவே அஹிம்ஸை எது, ஹிம்ஸை எது என்பதைப் பற்றிச் சாதாரண மக்கள் அறிந்து கொள்வது கஷ்டம். சாதாரண மக்களை அஹிம்ஸை என்ற பதம் தடுமாறச் செய்து விடுகிறது. அஹிம்ஸையைச் சரியாக அறிந்துகொள்ளாது தங்களுக்குத் தாங்களே ஹிம்ஸை செய்துகொள்ளுபவர்களும் உண்டு. அஹிம்ஸையைவரம்புக்கு மீறிக் கையாண்டு நாட்டுக்குக் கேடு செய்பவர்களும் உண்டு.

இயற்கை நிகழ்ச்சியைச் சிறிது நாம் ஆராய்ந்து பார்க்கவேண்டும். இயற்கையில் உயிர் வாழ்ந்திருப்பவை யாவும் மற்ற உயிர்களை அழித்து வாழ்ந்து வருகின்றன. மண்ணிலுள்ள பாக்டீரியா என்னும் உயிர்வகைகளை உண்டு தாவரங்கள் வளர்கின்றன. தாவரங்களை விலங்குகளும், மக்களும் உண்டு உயிர் வாழ்ந்து வருகின்றனர். விலங்குகளுள் வலிவு படைத்தவைகளில் சில வலிவற்றவைகளை அழித்து வாழ்ந்து வருகின்றன. பாம்பு, தவளையை உண்டு வாழ்கிறது. பூனை எலியைக் கொன்று வாழ்கிறது. சிங்கம், புலி போன்றவைகள் ஆடு, மாடு, மான் போன்ற சாதுவான மிருகங்களையும், வாய்ப்புக்கிடைத்தால் மனிதனையும் கொன்று வாழ்கின்றன. இங்ஙனம் இயற்கையிலுள்ள உயிர்களனைத்தும், உயிர் வாழ்வதற்கு உயிர்களைத் தின்று வாழ்ந்து வருகின்றன. இயற்கையே கொலைக்களமாக இருக்கின்றது.

வாழ்க்கையின் திட்டம் வாழ்க்கையை மேம்படுத்துவதாகும். வாழ்க்கை மேம்பாடு உள்ளத்தளவில் உள்ளது. உள்ளத்திலுள்ள தீய எண்ணங்களை ஒழித்துத் தள்ளுவது அஹிம்ஸைக்கு அடிப்படை ஆகின்றது. தீய எண்ணங்களுள் அழுக்காறு, அல்லது பொருமை கொடியது ஆகிறது. உலகத்தில் நிகழும்நற்காரியங்கள் பிரதிபலன்களை எதிர்பார்த்தே நிகழ்கின்றன. மக்களுக்கு நலன் செய்பவர்கள் தங்களுடைய நலன்களை முதலில் தீர்மானம் செய்து கொண்டுதான் செய்கிருர்கள். மற்றவர்களுடைய முன்னேற்றத்திலும், இன்பத்திலும் கருத்துடையவர்கள் அழுக்காறு அற்றவர்களாகிருர்கள். பிறருடைய முன்னேற்றத்தைக் குறித்து மகிழ்ச்சி அடைபவர்கள் அழுக்காறு என்னும் கெட்ட இயல்பை அழித்தவர்களாகிருர்கள். பேருக்காகவும், புகழுக்காகவும் பொருளுக்காகவும் மற்றவர்களைக் கெடுக்க எண்ணம் கொண்டிருப்பவர்கள் பொருமைக்காரர்கள் ஆகிருர்கள்.

அவர்கள் பிறர்க்குத் தீங்கு செய்வதற்கே திட்டம் போட்டுக்கொண்டிருப்பார்கள். பொறாமை என்னும் குணத்துக்கு உள்ளத்தில் இடம் தருகிறவர்கள் அஹிம்ஸா மூர்த்திகளாக இருக்க முடியாது. அவர்கள் புலால் உண்ணுது இருக்கலாம்; ஆனல் பொறாமைக் குணம் இருக்கும் வரையில் அவர்கள் அஹிம்ஸாமூர்த்திகள் ஆக மாட்டார்கள். ஆடு, மாடுகள் புலால் உண்ணுவதில்லை. ஆனல் அவைகள் யோகிகளாகவோ அஹிம்ஸா மூர்த்திகளாகவோ ஆகமுடியாது. மனிதாபிமானம் இல்லாது மக்களிடத்தில் அன்பு காட்டாது சுயநலக்காரர்களாக வாழ்பவர்களை அஹிம்ஸாமூர்த்திகள் என்று எப்படிச் சொல்லுவது? உழைப்பில் வஞ்சகம் செய்து, பிறரை ஏமாற்றிப் பிழைக்கும் வஞ்சகர்கள் புலால் உண்ணுமல் இருந்தால்மட்டும் அஹிம்ஸாமூர்த்திகள் ஆகிவிடமுடியுமா? மனித குல நலனுக்காகத் தம் தொழிலைச் செய்யாது பணம் சம்பாதிக்கும் நோக்கத்தோடு கலப்படம் செய்கின்றவர்களும், வஞ்சகம் செய்கின்றவர்களும், லஞ்சம் வாங்குகின்றவர்களும், புலால் உண்ணுது இருக்கலாம்; ஆனல் அவர்கள் அஹிம்ஸாமூர்த்திகள் அல்லர். பிறருக்குத் தீங்கு செய்வதைக்கனவிலும் நினையாதவர்கள், பிறருடைய செல்வாக்கைக் கண்டு மனம் பூரித்திருப்பவர்கள், தங்களுடைய பகைவர்களுடைய முன்னேற்றத்தைக் கண்டு மகிழ்ச்சி அடைபவர்கள் மேலானவர்கள். உள்ளத் தூய்மைக்குப் புறச் செயல் எவ்வளவுக்கெவ்வளவு உதவுகிறதோ அந்த அளவுக்கு அச் செயல் மேலானதாகிறது.

சிலர் மனதை மாசுபடுத்திக்கொண்டு புறத்தில் நல்லவர்கள் போன்று நடிப்பார்கள். அவர்கள் அஹிம்ஸாமூர்த்திகள் ஆகமாட்டார்கள். உள்ளத்தில் காமமும், குரோதமும் இடம் பெற்றிருக்க வெளித்தோற்றத்தில் தினமும் இரண்டு வேளை குளிப்பதும், சமயச் சின்னங்கள் அணிவதும், புலால் உண்ணுது இருப்பதும் ஆகிய புறச் செயல்களைச் செய்பவர்கள் அஹிம்ஸையைக் கடைப்பிடிப்பவர்களாகமாட்டார்கள். சிலர் எறும்புக் குழிக்கு அரிசி போடுவார்கள். மூட்டைப் பூச்சி, பேன் முதலியவற்றைக் கொல்லுதல் பாபம் என்று எண்ணி அவைகளை வளர்ப்பார்கள். ஆனல் அவர்கள் மக்களுக்கு எத்தகைய பாதகம் செய்ய முடியுமோ, அத்தகைய பாதகத்தைச் செய்வார்கள். அவர்கள் தங்கள் உள்ளத்தில் எறும்பு, பேன், மூட்டைப் பூச்சி முதலியவற்றிற்கு இரக்கம் காட்டுவதால் தாங்கள் அஹிம்ஸையைக் கடைப்பிடிப்பதாக எண்ணிக் கொண்டிருப்பார்கள். இன்னும் சிலர் குளிக்காமல் தலையில் ஜடையும், பேனும் வளர இடம் தந்திருப்பார்கள். குளிக்காததால் அவர்கள் உடம்பிலிருந்து ஒருவித துர்நாற்றம்வீசும். அவர்கள் அருகாமையில் வந்தால் மற்றவர்களுக்குச் சொல்ல முடியாத வேதனையாக இருக்கும். இப்படி மற்றவர்களுக்கு வேதனை தரும் அவர்கள் தாங்கள் அஹிம்ஸையைப் பின்பற்றுவதாக எண்ணிக் கொள்கிறார்கள்.

இந்திரியங்களை அடக்குவதற்கும், மனதை அடக்குவதற்கும், உயிர்களிடத்து அன்பு காட்டுவதற்கும், கடவுள் பக்தி பண்ணுவதற்கும் வழிகாட்டித்தர வேண்டும். உயிர்களிடத்து அன்பையும், மக்களிடத்து அன்பையும் வளர்ப்பதற்குச் சிற்றுயிர்களுக்கும் மக்களுக்கும் பணிவிடை பண்ணிப் பழகவேண்டும். உயிர்களுக்குச் சேவை செய்யவேண்டும் என்ற மனப்பான்மை வளர்ந்து வந்தால், உயிர்களுக்குத் துன்பம்பண்ணவேண்டும் என்றஎண்ணம் வராது.

மிருகங்களுள் தாவர உணவைப் புசிக்கும் இனங்களும், மாமிச உணவைப் புசிக்கும் இனங்களும் இருக்கின்றன. மாமிச பட்சிணிகளுக்கு மாமிச உணவு கொடுக்காவிட்டால் நாம் ஹிம்ஸை செய்தவர்களாகின்றோம். மாமிச பட்சிணிகளுக்குஅவசியம்மாமிசஉணவுகொடுத்தாக வேண்டும். மக்களுள் பலதரப்பட்டவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் வாழ்வின் சூழ்நிலைக்கு ஏற்றவாறு உணவுவகைகளும் மாறி அமைந்தாக வேண்டும். பனிப் பிரதேசத்தில் வாழும் எஸ்கிமோ போன்ற ஜாதியினர் மாமிச உணவு உண்டுதான் வாழ்ந்தாக வேண்டும். மாமிச உணவு உண்பதற்கு இடையில் அவர்கள் நல்வாழ்வு வாழ்ந்து வரலாம். உடல் உழைப்பு அதிகம் செய்கின்றவர்களும், பொருளாதாரத்துறையில் வசதியில்லாதவர்களும், மாமிச உணவு உண்பதன் மூலம் நிறையுணவு பெறுகிறார்கள். அவர்கள் மாமிச உணவு

உண்பதற்கிடையில் உயிர்களிடத்து அன்பும் பரோபாகாரச் சிந்தனையும் உடையவர்களாக இருக்கலாம். மாமிச உணவு உண்பதினால் அவர்கள் அஹிம்ஸையிலிருந்து பிறழ்ந்துபோய் விட்டார்கள் என்று எண்ணலாகாது. மனபரி பாகம் அடைந்து சாதனையில் தீவிரமாக ஈடு பட்டிருப்பவர்கள் சாத்வீக உணவு உண்பது அவசியம். அவர்கள் மாமிச உணவை ஒதுக்க வேண்டும்.

இயற்கையெங்கும் ஓர் உயிர் மற்றோர் உயிரை அழித்து வாழும் நிலை இருப்பதால் மாமிச உணவு உண்பதை அறவே தடுத்து நிறுத்துவது சாத்தியமில்லை. மாமிச உணவை யாவரும் ஐம்பது ஆண்டுகளுக்கு உண்பது இல்லை என்று வைத்துக்கொண்டால் உணவுநெருக்கடி வந்து விடும். ஆடு, மாடுகளுடைய கூட்டம் பெருகி அவைகள் வாழ்வதற்கும் திண்டாட்டம் ஏற் பட்டுவிடும். ஆகையால் சாதகர்களாக இருப்ப வர்கள் தாங்கள் சாதனையில் முன்னேறுவதற்கு அனுகூலமாக இருக்கும் சாத்வீக உணவை உண்டு மாமிச உணவை ஒதுக்கிவைத்துவிட வேண்டும். அதற்குமேல் அவ்விஷயத்தில் மனதைக் குழப்பிக் கொள்ளக்கூடாது.

உயிர்களுக்கு எவ்விதத் தீங்கும் செய்யாது அவைகளைப் பாதுகாப்பதே அஹிம்ஸையின் உச்ச நிலையாகும். இந்நிலையிலும் சில உயிர் களுக்குத் தீங்கு இழைக்கவேண்டிய நிலை ஏற் படுகிறது. ஊருக்குள் சிங்கம் அல்லது புலி புகுந்து விட்டால் அவற்றைச் சுட்டுத்தள்ள வேண்டும். நாட்டைப்பாதுகாப்பதற்குப் போர் புரிந்தாக வேண்டும். போர்க்களத்தில் எதிரி களை அழித்துத் தள்ளியாகவேண்டும். பாம்பு, தேள் முதலிய விஷ ஜந்துக்களைக் கொன்றாக வேண்டும். இச்செயல்களைச் செய்யாவிட்டால் நாம் உயிர் வாழ்ந்து இருக்கமுடியாது. ஆகை யால் தேவையான இடத்தில் ஹிம்ஸையும் செய்தாக வேண்டும். இது இயற்கை நியதி.

அஹிம்ஸை என்பது எத்தகைய உணவு உண்கிறோம் என்பதில் அடங்கியது அன்று. எத்தகைய மனப்பாங்கு உடையவர்களாக இருக்கிறோம் என்பதுதான் அஹிம்ஸைக்கு விளக்கமாகிறது. உள்ளத்தில் சிறறியல்பு களை வளர்ப்பவர்கள் அஹிம்ஸையைக் கடைப் பிடிப்பவர்கள் ஆகமாட்டார்கள். உள்ளத்தில் பேரியல்பை வளர்ப்பவர்கள் அஹிம்ஸையைக் கடைப்பிடிப்பவர்களாகிறார்கள். கண்ணப்பர் பன்றி இறைச்சியைத் தெய்வத்துக்குப் படைத் துத் தம் உள்ளத்தில் பேரன்பை வளர்த்தார். ஆகவே மாமிச உணவு உண்டவர்கள் பலர் பெருவாழ்வு வாழ்ந்து பெருநிலையை அடைந் திருக்கிறார்கள்.

மேனாட்டவர்கள் புலால் உணவு உண்ணு கிறவர்களாக இருப்பினும் உயிர்களிடத்தில் அவர்கள் காட்டும் அன்பை, புலால் உண்ணாதை நம் மக்களிடம் காணமுடியாது. மேனாட்டவர் களிடத்திலுள்ள நேர்மையான வாழ்வையும், மக்கள் சேவையையும் புலால் உணவு உண் ணாதை நம் மக்களிடம் காணமுடியாது. ஆங்கி லேயன் ஒருவன் நாய் ஒன்று வளர்த்து வந் தான். அதற்கு நல்ல உணவு கொடுத்து 'கொழு கொழு' என்று அதன் உடம்பை வளர்த் தான். போருக்குப் போகவேண்டிய நிலை வந்தபொழுது அந்த நாயைச் சுட்டுக்கொன்று விட்டுப் போனான். தான் போருக்குப் போய் விட்டால் அந்த நாய்க்கு நல்லுணவு வழங்கு பவர்கள் ஒருவரும் இருக்கமாட்டார்களாகை யால் அது பட்டினிகிடந்து வேதனையுறும் என்று எண்ணி அதைக்கொன்றான். நம் நாட் டவர்கள் வீட்டில் வாழும் ஆடு, மாடுகளைச் சரி யாகக் கவனிக்கமாட்டார்கள். தீனி இல்லா தும், தண்ணீர் இல்லாமலும் அவை கஷ்டப்பட் டுக்கொண்டிருக்கும். வீட்டில் வளரும் பூச்செடி களைக் கவனிக்கமாட்டார்கள். அவை தண்ணீர் இல்லாதும், உரம் இல்லாதும் வாடிக்கிடக்கும். இத்தகைய மனப்பான்மை உடையவர்கள் மாமிச உணவு சாப்பிடாது இருப்பதினால் தாங்கள் அஹிம்ஸையைக் கடைப்பிடிப்பதாக எண்ணிக்கொள்கிறார்கள்.

எவ்வுயிரும் என்னுயிர்போல்
எண்ணியிரங்கவும் நின்
தெய்வ அருட்கருணை
செய்யாய் பராபரமே

என்பது தாயுமானவர் வாக்கு. இத்தகைய பேருள்ளம் படைத்தவர்களாக நாம் மாறி அமையும் பொழுதுதான் அஹிம்ஸை என்ன என்பதை நன்கு அறிந்துகொள்ள முடியும். பேருள்ளமும் கருணையும் உடையவர்களாக நாம் மாறி அமைய இறைவன் அருள் புரிவாராக.

# இணக்கமறிந்திணங்கு

( சுவாமி துருவானந்தர் )

சுழலில் அகப்பட்ட துரும்பு போன்று அல்லலுற்ற எனக்கு ஆறுதல் சொல்ல அப்போது யாருமில்லை. இவ்வையக வாழ்வு வேம்பாகக் கசந்தது எனக்கு. இந்த உலகத்திற்குள் ஏன் வந்தேன்? எத்தனை நாட்களுக்கு இங்ஙனம் துன்ப துயரங்களில் கிடந்து உழல்வேன்? எப்பொழுது இவ்வுலகச் சிறையிலிருந்து விடுதலை கிடைக்கும்? இங்ஙனம் படலம் படலமாக எண்ண அலைகள் உள்ளத்தில் மோதிய வண்ணமிருந்தன. புகைவண்டி போய்க்கொண்டிருந்தது. வண்டிக்குள்ளிருந்த நான் வெளியுலகைக் காண விரும்பினேன். இயற்கையும் எனது உள்ளத்தைப் பிரதிபலித்துக் காட்டுவதுபோன்று காரிருளைக் காட்டி அச்சுறுத்தியது. தொடர்ந்து பெய்த மழையும், இடையிடையே தோன்றிய மின்னலும் எனது வரண்ட வாழ்வுக்கு இடையில், சிறிது இனிமையும், ஒளியும் நிறைந்ததாக ஒரு பிரமையை ஏற்படுத்தின. வண்டியிலமர்ந்திருந்தவர்களின் பேச்சுக் குரல் எனது சிந்தனையைக் கலைத்தது. அவரவர் வீட்டு விவகாரங்களையும், இனிமேல் தாங்கள் ஆற்ற இருக்கும் எதிர்காலக் கடமைகளையும் குறித்து நீண்ட பிரசங்கமே செய்துகொண்டிருந்தனர். மணவிழாவுக்குச் சென்றுகொண்டு இருந்தனர் அக்கூட்டத்தார். அவர்கள் செல்வம் படைத்தவர்கள் என்பதை அவர்கள் அணிந்திருந்த ஆபரணங்களின் மூலமும், அவர்கள் பேசியபேச்சினின்றும் தெரிந்துகொண்டேன். பேசி சலித்துப்போன அவர்கள் அசதியால் ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருந்தனர். என் மனம் சஞ்சலித்துத் தவித்தது. ஒருகணம் பெரும்அதிர்ச்சி. இடியோசை போன்ற பெரும் சத்தம். ஐயோ என்ற கூக்குரல். வண்டி பயங்கரமாகக் கவிழ்ந்தது. பெரிய மழை பெய்ததால் பாலம் உடைந்து அதன் மேல் நீர் பெருக்கெடுத்து ஓடியது. வண்டி ஆற்றில் மூழ்கியது. எத்தனைபேர் மாண்டார்கள், எத்தனைபேர் உயிரோடு போராடினார்கள் என்பது எனக்குத்தெரியாது. ஆற்றில் நிறைய நீர் போய்க்கொண்டிருந்தது. எல்லாப் பெட்டிகளும் என்ஜினும் ஆற்றில் மூழ்கிவிட்டன. ஆனால் நான் இருந்த கடைசிப் பெட்டி மணல்திட்டில் விழுந்ததால் சிறிது நீருக்கு மேலே தெரிந்தது. ஆகவே சிலர் பிழைத்திருக்கலாம் என எண்ணினேன். தெய்வாதீனமாக நீருக்குமேலே வந்து நீந்தி கரையிலிருந்த ஒரு மரத்தின் கிளையைப்பற்றிப் பிடித்து அதில் உட்கார்ந்திருந்தேன். இருள் சூழ்ந்த அந்த இரவில் எங்கு போவது என்று தெரியாது திகைத்தேன். நீரில்மூழ்கி இறந்த அத்தனை உயிர்களோடு நானும் போயிருக்கக் கூடாதா? எனக்கு ஏன் ஆண்டவன் உயிர் பிச்சை அளித்தான்? என்று எண்ணினேன்.

கடந்தகால நிகழ்ச்சிகள் என் கண்முன்னே தோன்றின. கிராமத்தில் பெருந்தனக்காரர் என்று புகழப்பட்ட நல்லவருக்குப் பிள்ளையாகப் பிறந்தேன். எனக்கு முன்னர் பெண் குழந்தைகள் மூவர் பிறந்திருந்தாலும் ஆண் குழந்தையில்லை என்ற குறை என்னால் நீங்கியதால் ஆனந்தம்கொண்ட பெற்றோர் அறிவானந்தம் என்ற பெயர் சூட்டி என்னை வளர்த்தனர். உரிய காலத்தில் பள்ளியில் சேர்ந்து கல்வி கற்று வந்தேன். பெயருக்கேற்ற அறிவுக்களஞ்சியமாகத் திகழ்ந்தேன். கிராமத்தாரும், பள்ளி ஆசிரியரும், மாணவர் அனைவரும் எனது அறிவையும் எனது பண்பையும் எண்ணி வியந்தனர். என்னோடு பழகுவதைப் பெருமையாக எண்ணினர். கிராமத்தில் உயர்நிலைப்பள்ளிப் படிப்பை முடித்தேன். எனது மாவட்டத்திலேயே அதிக மதிப்பெண்கள் பெற்று முதல் மாணவனாகத் தேர்ந்து பரிசுகள் பல பெற்றேன். தேர்ச்சி பெற்றபின் பிறகு என்னைக் கல்லூரியில் படிக்க வைக்கலாமா வேண்டாமா என்ற சிந்தனை பெற்றோர்களுக்கு இருந்தது. நகரத்தில் சென்று கல்லூரியில் தங்கிப் படிக்கும் மாணவர்கள் கெட்டுவிடுகிறார்கள் என்ற பயம் என் தந்தைக்கு இருந்தது. எனது பள்ளித் தலைமை ஆசிரியர் வற்புறுத்தியதன் விளைவாக என் தந்தை அரை மனதோடு கல்லூரியில் படிக்க அனுமதியளித்தார். செல்வ வளமிக்க எனது குடும்பத்திற்கு நான் படித்து வேலை தேடிச்

சம்பாதித்துப் போடவேண்டும் என்ற நிலை எனக்கில்லை. எனது தந்தையின் விருப்பமும் அதுவே. பிறரிடம் சம்பளத்துக்கு வேலைக்குச் செல்லுவதைக் கைகட்டி நின்று பிறர் இட்ட வேலையைச் செய்து சம்பளம் வாங்குவதைக் கேவலமாக எண்ணினர் என் தந்தையார். ஒவ்வொருவரும் குலத்தொழிலைச் செய்தால் பிறரிடம் ஊழியத்துக்குப் போகவேண்டிய தில்லை. போலி கௌரவமும், சோம்பலும், படாடோபமும் தங்களது குலத்தொழிலைச் செய்வது இழிவானது என்ற நிலையை உரு வாக்கிவிட்டன. நகத்தில் அழுக்குப்படாது, மடிப்பு கலையாது, நிழலில் உட்கார்ந்து நிறைய சாம்பாதிக்க வேண்டுமென்று எல்லாரும் நினைப்பதால்தான் குலத்தொழிலைப் புறக் கணித்துவிட்டு வேலை விண்ணப்பத்தை எடுத் துக் கொண்டு அலைந்து திரிகின்றனர்.

பெற்றோரின் அனுமதியோடு நகரத்திற்கு வந்து கல்லூரியில் சேர்ந்தேன். கிராம வாழ்க் கையைவிட நகர வாழ்க்கை முற்றிலும் மாறு பட்டிருந்தது. சுருக்கமாகக் கூறினல் முதலில் எனக்கு நரக வாழ்க்கையாகத் தென்பட்டது. படிப்பிலும், நடிப்பிலும், பாடுவதிலும், பேச்சி லும் வல்லவனுகத் திகழ்ந்தேன். ஆகையால் நான் எல்லாருக்கும் சுலபத்தில் நன்கு அறிமுக மாகி விட்டேன். என்னிடம் இயல்பாக ஒரு கெட்ட பழக்கமும் இருந்தது. சதா பேசிக் கொண்டே இருப்பேன். முன்பின் தெரியாதவரு டனும் உடனே பழகிவிடுவேன். இதன் மூலம் கல்லூரியில் எனக்கு நிறைய நண்பர்கள் இருந்தனர். எனது விடுதி அறையில் ஒரே அமர்க்களமாக இருக்கும். என்னைக் கல்லூரி யில் சேர்க்க சிபாரிசு செய்த தலைமை ஆசிரியர் ஒருநாள் என்அறைக்குள்வந்திருந்தார். கண்ட புத்தகங்கள் கிடப்பதையும், நண்பர்கள் குழுமி அரட்டை அடித்துக்கொண்டு இருப்பதையும் கவனித்து என்னைத் தனியே அழைத்து கண்ட தைப் படித்து மனதைக் கெடுத்துக்கொள் ளாதே. வாழ்வின் முன்னேற்றத்துக்குதவும் நூல் களைத் தேர்ந்தெடுத்துப்படி. கண்ட மாணவர் களிடமெல்லாம் நட்புக்கொள்ளாதே. இணக்க மறிந்து இணங்கு. நட்புக்கொள்ளுமுன் பிறரை நன்கு ஆராய்ந்து அவருடைய நட்பை நாடு. இல்லையேல் துன்பப்படுவாய்' என எச்சரித் துச் சென்ருர். அவர் எச்சரிக்கை செய்தும் எனது தவறை நான் திருத்திக்கொள்ள முயல வில்லை. மாணவர்களுக்கிடையிலும் பலதரத் தார் உண்டு. அவர்களோடு பழகியதில் அவர் களிடமிருந்த தீயசெயல்கள் என்னைப் பற்றிக் கொண்டன. தந்தையும் பணம் அனுப்பிக் கொண்டேயிருந்தார். நானும் அதை முறை யற்ற வழியில் கரைத்துக்கொண்டே வந்தேன். படிப்பில் கவனம் குறைந்தது. தேர்வில் தோல்வி. தந்தைக்கு விஷயம் தெரியவந்தது. புறப்பட்டு வரும்படி கடிதம் எழுதினர். மழை யின்றி அந்த ஆண்டு நிலத்தில் ஒன்றும் விளைய வில்லை. 'செக்களவு பொன்னிருந்தாலும் செதுக் கித்தின்ருல் எத்தனை நாள்வரும்?' என்பது பழமொழி. வரவின்றி என்னல் செலவுதான் அதிகரித்து வந்தது. வீட்டிலிருந்து பணம்வந்து கொண்டேயிருக்க, நானும் தாராளமாக என் னேடு இருப்பவர்களுக்குச் செலவு செய்தேன். பணம் வருவது தடைபட்டதும் நண்பர்களின் கூட்டமும் என்னை விட்டு நீங்கியது. இருப்பி னும் பணம் சேர்க்கச் சிலர் நூதன முறைகளை எனக்குக் கற்றுக்கொடுத்தனர். பக்கத்து அறை மாணவர்களிடம் உள்ள பேனு, கடிகா ரம், பணம் போன்ற பொருட்களைத் திருட ஆரம்பித்தேன். அதில் துணிவு ஏற்படவே பெரிய திருட்டில் ஈடுபட ஆரம்பித்தேன். ஒரு நாள் ஜேப்படி செய்ததற்காகச் சிலர் என்னைப் பிடித்துக் கொண்டனர். அவர்களிடமிருந்து தப்பியோடினேன். "திருடன் திருடன்" என்று கூவி என்னைத் துரத்தி வந்தனர். சுவர் ஏறித் தாவி அப்போதுதான் நகர்ந்து போய்க்கொண்டிருந்த வண்டியில் ஓடி ஏறிக் கொண்டேன். என்னேடு படித்தவர்கள் பட் டம்பெற்று வீடு திரும்பினர். நானும் திருட் டுப்பட்டம் சூட்டப்பெற்று ஊரை விட்டு ஓடி னேன். தீயவனிடத்தில் வைத்த இணக்கத் தால் நான் திருடன் என்று புறவுலகத்தால் தூற்றப்பட்டேன். அந்த அவப்பெயரோடு இன்னும் உயிர் வாழவா? இந்தச் செய்தி பெற்ருேர்களுக்குத் தெரிந்தால் நெஞ்சு வெடித் துச் செத்துவிடுவார்களே எனக்கதறினேன். உயிர்போனலும் இனிமேல் திருட மாட்டேன் என்று உறுதி எடுத்தேன். ஆனல் அதற்குள் ஏதோ ஒன்று என் காலில் வந்து மோதியது.

இருள் மறைந்து விடிந்து விட்டது. எனது பழைய சரிதத்தை எண்ணிக்கொண்டிருந்ததில் நேரம் போனதே தெரியவில்லை. தண்ணீரில் மிதந்து வந்தது ஒரு பெண்ணின் சவம். வெளிச்சத்தில் கூர்ந்துபார்த்தேன். ஆபரணங்கள் நிறைய அணியப்பெற்ற அப்பெண்ணின் உடலில் ஆங்காங்கு அடிபட்ட காயங்கள் தென்பட்டன. என்னுடைய பெட்டியில் பேசிக்கொண்டும் சிரித்துக்கொண்டும் மணவிழாவுக்காகப் போய்க்கொண்டிருந்த பெண்தான் பிணமாக மிதக்கிறுள் என்பதை அவளுடைய முகம் தெளிவாகக் காட்டியது. சீ!வாழ்க்கை என்பது அவ்வளவு நிலையில்லாததா? நீர்க்குமிழி போன்ற இந்தநிலையில்லா வாழ்விலிருந்து தப்ப வழி என்ன என ஆராய்ந்தேன். எனது பழைய வாசனை தலையெடுத்தது. கண்கள் அந்த ஆபரணங்களைக் கண்டன. விவேகமும் விசாரமும் நீர்க்குமிழிபோல் உடனே மறைந்தன. பிணத்தின்மீது இருந்த ஆபரணங்களை எல்லாம் எடுத்துப் பொட்டலம் கட்டினேன். அவ்விடத்தை விட்டு உடனே புறப்பட்டேன். பக்கத்திலிருந்த பெரிய ஊர் போய்ச் சேர்ந்ததும் அந்த நகைகளை விற்றுப் பெரிய வியாபாரம் செய்து இனிமேலாவது கண்ணியமாக வாழலாம் என முடிவு செய்தேன். சில நாட்களில் வியாபாரமும் தொடங்கப்பட்டது. இருந்தாலும் நான் திருடன் என்பதையும், நகைகளை மறைத்து வைத்திருப்பதையும் யாராவது தெரிந்துகொண்டால் என்ன செய்வது என்ற பயம் உள்ளத்தில் சதா அரித்துக்கொண்டேயிருந்தது. நாட்கள் கழிந்தன. ஒருவன் என்கடைக்கு வேலை கேட்டு வந்தான். அவனுடைய ஊரை விசாரித்தேன். விபரம் தெரிந்தவுடன் என் உயிர் போய்விடும் போலிருந்தது. வந்த ஆள் வேறுயாருமல்லன். நான் எந்த ஊரில் யாரிடம் ஜேப்படி செய்து அவரிடம் அகப்படாது தப்பி வந்தேனோ அந்தப் பேர்வழியே வந்துநின்றான். எனது வசதியான வாழ்வால் நிறமும், உடலும் மாறியிருந்தன. முன்பு என்னைப்பார்த்தவர் எனினும் இப்போது என்னை சந்தேகப்படமாட்டார் என எண்ணினேன். இருப்பினும் எனக்கு நிலைகொள்ளவில்லை. அவரை இரண்டு நாட்கள் கழித்து வரச்சொல்லி அனுப்பினேன். இனி அங்கு இருந்தால் உண்மை வெளிப்பட்டு விடும் எனப் பயந்து கடல் கடந்து தூரதேசங்களுக்கு எங்கேயாவது போய்விடலாம் என்று தீர்மானித்து கப்பலுக்கு டிக்கெட் எடுத்தேன். எங்கு போவது என்ற திட்டமில்லாது கப்பலில் பிரயாணம் செய்தேன்.

'நுணலும் தன் வாயால் கெடும்' என்ற ஒரு பழமொழியும் உண்டு. தவளை தன் வாயைத் திறந்து ஓசையைக் கிளப்புவதால் பாம்பு அதை அறிந்து உடனே பிடித்து விடுகிறது. கப்பலில் பிரயாணம் செய்த நானும் முன்பின் தெரியாதவருடன் வலியப் போய் பேசிப் பழகினேன். இதன் முடிவு எனது உயிருக்கே உலை வைப்பதாக இருந்தது. எப்படி? கப்பலில் வேற்றான் ஒருவன் எனது அறைக்கு வந்துபோய்க் கொண்டிருந்தான். நான் நிரம்பப் பேசியதைப் புரிந்து கொண்டான். பயனற்ற சொற்களைப் பேசிப்பழகுபவர்கள் எதைப் பேசவேண்டும், எதைப் பேசக்கூடாது என்ற விவேகமின்றி மனதிலுள்ளதையெல்லாம் வாயால்கொட்டித் தள்ளுவார்கள்.

சலங்கை சதா ஒலித்துக்கொண்டே இருப்பதால் அது காலில் இருக்க வேண்டியதாயிற்று. ஆனால் ஒலிக்காத ஆபரணங்கள் தலையிலும், முகத்திலும் வைக்கத் தகுதி படைத்தவைகளாகிவிட்டன. சதா பேசிக்கொண்டிருப்பவர்கள் தாங்கள் எந்தவிதச் செயலையும் உருப்படியாகச்செய்யமாட்டார்கள் என்பதை வெறும் பேச்சின் மூலம் விளம்பரம் செய்கின்றனர். பேசாது காரியத்தில் தீவிரமாக ஈடுபடுபவர்களே உலகில் பெருங்காரியங்கள் பல செய்துள்ளனர் என்பதை என் தந்தை அடிக்கடி எனக்குச் சொல்லி எனது வாயாடித்தனத்தை மாற்ற முயலுவார். ஆனால் அப்பழக்கத்தை மாற்ற நான் முயலவில்லை. அதனால் இப்போது துன்பம் வரும்போது தவறை நினைந்து வருந்துகிறேன். வந்தவனிடம் என் வாழ்க்கையைப் பற்றியும், நான் வந்த விபரம் எல்லாவற்றையும் திறந்த மனத்தோடு கொட்டித் தள்ளினேன். ஒருநாள் இரவு கப்பலின் மேல் தளத்திற்கு என்னை அழைத்துச் சென்று கடலில் ஒரு நூதன ஜந்து வருவதாகக் காட்டி என்னைப் பிடித்து ஒரே தள்ளாகக் கடலில் தள்ளிவிட்டான்.

கடலில் தத்தளித்த எனக்கு ஒருமரக்கட்டை உதவியாகக் கிடைத்தது. அதைப் பற்றிக் கொண்டு கத்தினேன், கதறினேன். கப்பல் போய்விட்டது. உழைக்காது வந்த நகைகள் வந்தவழியே போய்விட்டன. அந்தத் தங்க நகைகளைப் பாதுகாத்து வைத்து, விற்று நிறைய சம்பாதிக்க வேண்டும் என்ற ஆசை யால் நான் பட்ட துயரங்களுக்கு அளவில்லை.

'ஆசைப் படப் பட ஆய்வரும் துன்பம்
ஆசைவிட விட ஆனந்தம் தானே'

என்று எளிதாகச் சொல்லிவிட்டுச் சென்றனர் பெரியோர்கள். அதன் உண்மையை உணர வேண்டிய வாய்ப்பு இப்போதுதான் வந்தது. அழுது, கதறி, நடுக்கடலில் நான்பட்டவேதனை இவ்வளவு அவ்வளவு அன்று. தெய்வத்தைப் பற்றியே எண்ணமில்லாத எனக்கு இப்படி ஒரு துன்பம் வந்த பிறகுதான் ஆண்டவனை நினைத்தேன். ஆக துன்பம்தான் நம்மைத் திருத்தியமைக்கிறது. அதனால் துன்பமும் வேண்டப்படுவதே. நடுக்கடலில் கட்டையைப் பற்றிக்கொண்டு பிணம் போன்று கிடந்த போது மற்றொரு கப்பல் அந்த வழியே வந்தது. அந்தக்கப்பல் கண்ணில் பட்டதும் சிரமப்பட்டுக் குரல் கொடுத்தேன். அந்தக் கப்பலின் தலைவன் மிகவும் இரக்கக் குணம் படைத்தவன். ஆகவே என்மீது இரக்கம் கொண்டு பெரிய கயிறைப் போட்டு என்னை மேலே தூக்கி கப்பலில் சேர்த்தான். உடல் நலிவுற்றிருந்த நான் கப்பலில் பிரக்ஞையற்று வீழ்ந்தேன். விழித்துப் பார்த்தபோது பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சருடைய திருவுருவம் பெரிதாக என் கண்ணில் பட்டது. வியப்புற்று அக்கம்பக்கம் பார்த்தேன். முக மலர்ச்சியுடன் துறவி ஒருவர் என்னை நோக்கி வருவதைக்கண்டேன். அவருடைய கண்களில் கருணை பிரகாசித்தது. தயையே வடிவெடுத்தவராக இருந்தார் அந்தமூர்த்தி. நான் அங்கு வந்து சேர்ந்த விபரங்களனைத்தையும் விடாது கூறினர். கப்பலில் மயங்கி விழுந்த என்னைக் கப்பலிலுள்ள மருத்துவமனையில் சேர்த்தார் கப்பல் தலைவர். அந்தக் கப்பல் ரங்கூன் வந்து சேர்ந்தது. கப்பல் தலைவருக்கு ரங்கூனிலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்துடன் நெருங்கிய தொடர்பு உண்டு. நோயுற்றவர்களுக்கும், மனச்சாந்தி அற்றவர்களுக்கும் நல்ல சிகிச்சை அளித்துவருகிறது அங்குள்ள ஸ்ரீராமகிருஷ்ண மடம். கப்பல் தலைவரின் உதவியால் நான் ஸ்ரீ ராமகிருஷ்ண சேவாஸ்ரமத்தில் சேர்க்கப் பட்டேன் என்ற விபரத்தை அந்த தெய்விக புருஷர் எனக்கு விளக்கினர். உடல்நலம் பெற்றேன். இனி என்ன செய்யவேண்டும் என்று என்வாழ்க்கைப் பிரச்னை என்னை உறுத்தியது. முன்பின் தெரியாத என்னைத் தாயினும் சாலப்பரிந்து காப்பாற்றிய இத்துறவிகளுக்கு நான் எப்படி நன்றியைத் தெரிவிப்பது என எண்ணினேன். கைம்மாறு கருதாது பிறருக்காகத் தங்களையே அர்ப்பணித்த அந்த தியாகியர் கூட்டத்தில் சேர்ந்தேன்.

ரயிலிலிருந்து விழுந்து தண்ணீரில் மிதந்த எனக்குக் கரையிலிருந்த மரம் அடைக்கலம் கொடுத்தது. அதற்கிடையில் நான் சவத்தின் மீது இருந்த பொன் நகையின்மேல் ஆசை வைத்ததின் விளைவாக நான்பட்ட துன்பங்கள் எவ்வளவு என்பதைப் பார்த்தீர்களா! நடுக்கடலில் தத்தளித்த எனக்கு அடைக்கலம் கொடுத்தவர் கற்பக விருட்சமாகிய பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர். அவர் ஒரு ஸ்பரிசவேதி. பாபியாக இருந்த என்னைப் பத்தரை மாற்றுத் தங்கமாக்கி விட்டார் பரமஹம்சதேவர்.

கல்லூரியில் படித்தபொழுது ஆராயாது தீயவர்களோடு நட்புக்கொண்டேன். அதன் விளைவாகத் திருடனாக மாறினேன். எனது நினைவாக தந்தை பைத்தியம் பிடித்து மாண்டார். நல்லவர்களின் தொடர்பால் தன்னலமற்ற துறவியானேன். உலகுக்கு ஒளிகொடுக்க என் வாழ்வை அர்ப்பணித்தேன். சான்றோர் இணக்கத்தால் என் வாழ்வு புனிதவாழ்வாக மாறியமைந்தது.

தீயோடு சேருகிற அடுப்புக்கரி தீ மயம் ஆவது போன்று நல்லாருடன் சேருகிற தீயவனும் நல்லவனவான். ஆகவே "இணக்க மறிந்து இணங்கு" என்பது என்வாழ்வை மாற்றியமைத்த ஒரு மந்திரமாகும்.

எத்தகைய இணக்கம் ஏற்புடையது, எத்தகைய இணக்கம் வாழ்வைக் குலைக்கிறது என்பதை அவனுடைய வாழ்வு நமக்கு விளக்குகிறது. இங்ஙனம் அறிவானந்தன் தன் வாழ்வை விமர்சனம் செய்தான்.

---

# சம்பந்தர் வாக்கு

(வித்துவான் ஆதி. பாலசுந்தரன்)

"நான் ஒரு நூலைப் படித்தேன். அப்போது என் உடம்பு சிலிர்த்தது; என் தலை சுழன்றது; அது கவிதை நூல் என்பதை அப்போது உணர்ந்தேன்" என்கிறார் எமிலி டிக்கன்ஸன். பாரதியாரின் பாடலில் நெஞ்சைப் பறி கொடுத்த கவிமணி கிறுகிறுத்துப் போனதாகக் கூறுகிறார்.

"உணர்ச்சி, கற்பனை, ஒலிநயம், அணிநலன்கள், தொடை நயம், சுவைகள் முதலியவை பொருந்திச் செந்தமிழ்ச் சொற்களால் நல்ல வடிவத்துடன் அமைவதாலேயே கவிதை தனிச் சிறப்புற்றுத் திகழ்கிறது" என இலக்கியத் திறனாய்வாளர்கள் கூறுகின்றார்கள்.

பாட்டில் அமைகின்ற ஒலிநயம், கேட்பவரின் செவிவாயிலாக அவருடைய உடல் நரம்புகளை இயக்கி விடுகிறது. தொலைவில் பாடப்படுகின்ற தேவாரம் முதலிய பக்திப் பாடல்களைச் செவியால் கேட்டு நமது உள்ளத்தைப் பறி கொடுத்து விடுகிறோம்.

உரைநடையைப் (Prose) படிக்கும் போது நமது மனம் ஒலியைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. ஆனால், கவிதைக்கு உரிய இலக்கணங்கள் நன்றாக அமையப் பெற்ற ஒருபாட்டின் ஓர் அடியைப் படித்து முடித்ததும், மனம் அதன் ஒலி நயத்தில் ஈடுபடுகிறது. திரும்பத் திரும்ப அந்த அடியைச் சொல்லி ஒலி நயத்தை அனுபவிக்கிறோம்.

ஒரு சொல்லையே வைத்துக்கொண்டு, ஓசை இன்பம் உண்டாகும்படி கவி இயற்றுவதும் உண்டு. "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத் துப்பாய தூஉம் மழை"; "பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு". துப்பு என்ற ஒரு சொல்லையும், பற்று என்ற ஒரு சொல்லையும் வைத்துக்கொண்டு ஒரு முழுமையான கருத்தை விளக்கும் பாடலை வள்ளுவர் பாடியுள்ளார்.

குடகு, விகடகவி என்ற சொற்களை முதலில் இருந்துகடைசிவரையிலும், கடைசியில் இருந்து முதல் வரையிலும் சிறுபிள்ளைகளை வாசிக்கச் சொல்லுவதுண்டு. எப்படி வாசித்தாலும் சொல் அமைப்பு ஒன்றுபோல வரும்.

இதே போல, முதலில் இருந்து கடைசி வரையிலும் வாசித்தாலும், கடைசியில் இருந்து முதல்வரையிலும் வாசித்தாலும் ஒன்று போல வரக்கூடிய பாடல்கள் பாடுவதும் உண்டு. இவ்வாறு அமைந்த பாடலுக்கு "மாலைமாற்று" என்று பெயர்.

இதே மாலை மாற்றுப்பாடலைச் சம்பந்தர் பாடியிருக்கிறார், சீகாழிக்கு வந்த சமயத்தில் இவ்வாறு பாடுகிறார்.

"யாமாமா நீ யாமாமா யாழீகாமா காணாகா
காணாகாமா காழீயா மாமாயாநீ மாமாயா."

—இதனை ஆரம்பத்தில் இருந்து கடைசி வரையிலும் வாசியுங்கள். பிறகு, கடைசியில் இருந்து பின்நோக்கி வாசியுங்கள். இரண்டும் ஒன்று போல வரும்.

இதன் பொருளைக் காண்போம்:

யாமாமா—யாம் ஆமா. யாம்—ஆன்மாக்களாகிய நாங்களே கடவுள் என்று சொன்னால்; ஆமா—அவ்வாறு சொல்லுவது பொருத்தம் ஆகுமா?' நீ யாமாமா—நீ ஆம் ஆம். நீ—நீயே கடவுள் என்றால், ஆம் ஆம்—அவ்வாறு சொல்லுவது முற்றிலும் பொருந்துவதாகும். மாயாழீ—பேரியாழ் என்னும் வீணையை வாசிப்பவனே! காமா—எல்லாரும் விரும்பக் கூடிய கட்டழகை உடையவனே! காண்—எல்லாரும் காணும்படியாக, நாகா—பாம்புகளை ஆபரணமாக அணிந்தவனே! காணா—கை, கால் முதலிய உறுப்புக்களைக் காணமல் செய்த, காமா—காமனை (மன்மதனை) உடையவனே, காழீயா—சீகாழித் தலத்திலே எழுந்தருளியிருப்பவனே, மா—இலக்குமிக்குக் கணவனாகிய, மாயா—திருமாலாகவும் வருபவனே, மா—கருமை நிறம் பொருந்திய, மாயா—மாயை முதலிய மலங்களில் இருந்து, நீ—நீ எங்களை விடுதலை செய்வாயாக.

"சீகாழி என்ற தலத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே! ஆன்மாக்களாகிய நாங்களே கடவுள் ஆவோம் என்று சொல்லுவது பொருத்தமில்லை. நீயே கடவுள் என்று சொல்லுவது தான் பொருத்தம் ஆகும். பேரியாழ் என்னும் வீணையை வாசிப்பவனே! எல்

லாரும் விரும்பும் கட்டழகை உடையவனே! எல்லாரும் காணும்படியாக நாக ஆபரணங்களை அணிந்தவனே! மன்மதனை உருத் தெரியாமல் அழித்தவனே! திருமாலாகவும் வருபவனே! நீ, மாயையில் இருந்து எங்களை விடுவிப்பாயாக'' என ஞானசம்பந்தர் வேண்டுகின்றார்.

யாம் ஆமா—ஆன்மாக்களாகிய நாங்களே கடவுள் என்று சொன்னால் அது பொருத்தம் ஆகுமா? ஆகாது. இதைப் பற்றிச் சற்றுச் சிந்திப்போம்.

கடவுள், உயிர், உலகம் என்ற மூன்று பொருள்களைப் பற்றி நம் முன்னோர்கள் என்ன சொல்லி வைத்திருக்கிறார்கள் என்பதை நாம் படித்திருக்கிறோம்; நாமும் சிந்தனை செய்கிறோம்; அவற்றைப் பற்றிப் பேசியும் வருகிறோம்.

கடவுளுக்கும், உயிர் என்று சொல்லக்கூடிய ஆன்மா அல்லது ஆத்மாவுக்கும் உள்ள தொடர்பைப் பற்றிச் சொல்லப்படும் இரண்டு விதமான கொள்கைகளை மட்டும் இங்குச் சுருக்கமாகப் பார்ப்போம்.

நம் ஒவ்வொருவருடைய உடம்புக்குள்ளேயும் ஒவ்வோர் உயிர் அல்லது ஆன்மா உள்ளது. உயிர் அல்லது ஆன்மா கண்ணுக்குப் புலனாவதில்லை. இருந்தாலும் ஆன்மா இருக்கிறது என்பது நிச்சயம் ஆகும். ஆன்மா நித்தியமானது. உடல் அழியும்; ஆனால் ஆன்மாவுக்கு அழிவே இல்லை.

உடலை விட்டுப் பிரிந்த உயிர் எங்கேபோகிறது? ஒருவர் செய்த நல்வினைக்கு ஏற்றவாறு அவருடைய உயிர் மோட்ச உலகத்திற்குச் செல்லும்; அவர் செய்த தீவினைக்கு ஏற்ற பிரகாரம் அவ்வுயிர் நரகலோகத்திற்குச் செல்லும். நல்வினை தீவினைகளுக்கு ஏற்றவாறு மறுபிறப்பையும் அடைகின்றது.

உயிரைப் பற்றி இவ்வாறு பொதுவாகச் சொல்லப்படுகிறது. இதை எல்லாரும் ஏற்றுக் கொள்ளுகிறார்கள்.

வேதங்களில், ஆப்த வாக்கியங்கள் அல்லது மகா வாக்கியங்கள் என்று சொல்லக்கூடிய நான்கு வாக்கியங்கள் இருக்கின்றன.

''ப்ரக்ஞானம் பிரம்மம்'' என்பது ஒன்று. அதாவது பேரறிவே பிரம்மம் என்பது அதற்குப் பொருள். ''தத்வமஸி'' என்பது மற்றொன்று. ''நீ தான் அது'' என்பது இதன் பொருள். அதாவது, குரு ஒருவர் தம் சீடனை நோக்கி, ''நீ தான் அந்தப் பிரம்மமாக இருக்கிறாய்'' என்கிறார். மற்றொன்று, ''அகம் பிரம்மாஸ்மி'' என்பது. ''நானே பிரம்மம்'' என்பது இதன் பொருள். ''அயம் ஆத்மா பிரம்மம்'' என்பது மற்றொன்று. அது பிரம்மமாக இருக்கிறது என்பது அதற்குப் பொருள்.

இவ்வகையான வியாக்கியானங்களின்படி உயிர் எனப்படும் ஆன்மாவும் முதல்வனாகிய இறைவனும் ஒரே பொருள் என்றாகிறது. இப்படிச் சொல்லுவது ஒரு சாரார் கொள்கை.

''நீ முதற்பொருள்'' என்று வேதங்களில் சொல்லப்படுவதை ஏற்று, '' நானே முதல்வன்'' என்று ஆன்மா தன்னை நினைத்துக் கொண்டால், ஆன்மா முதற்பொருள் ஆகிய இறைவன் ஆகிவிடாது.

நெருப்பு என்னும் சொல்லை ஒருவன் உச்சரித்த உடனேயே, அந்த நெருப்பு அந்த இடத்தில் வந்து சுடுதலாகிய தனது தொழிலைச் செய்யுமா? செய்யாது.

அதுபோல ஒருவன்''நானே பிரம்மம்''என்று எண்ணிக்கொண்டால் பிம்ரமம் ஆகிவிடமாட்டான். பிரம்மத்தினுடைய தன்மையை உயிர் தானாக அடைந்துவிட முடியாது. சற்குருவின் திருவருள் துணையோடுதான் பெறமுடியும்.

ஆன்மா மாயைக்கு வேறானது.ஆனால் மாயையோடு சேர்ந்து இருக்கும்; அப்படிச் சேர்ந்திருக்கும்போது மாயையின் தன்மையைப் பெற்றிருக்கும். ஆன்மா இறைவனுக்கு வேறானது; ஆனால், இறைவனோடும் சேர்ந்திருக்கும். அவ்வாறு சேர்ந்திருக்கும்போது இறைவனின் தன்மையைப் பெற்றிருக்கும்.

இவ்வாறு ஆன்மாவுக்கு இலக்கணம்கூறுவர் ஒரு சாரார்.

இந்த இரண்டு கொள்கைகளுமே, அடிப்படை உண்மைகளைத் தங்களின் அனுபவ வாயிலாக உணர்ந்த அனுபூதிமான்களின் அருள் வாக்குகளாகும்.

சம்பந்தப் பெருமானும் அடிப்படை உண்மைகளைத் தமது அனுபவ வாயிலாக உணர்ந்த அனுபூதிமான். ''ஆன்மாவே கடவுள் ஆகும் என்று சொல்லுவது பொருந்தாது'' என்று

தமது அனுபவத்தை இங்கே கூறுகிறார்.

மாயூரத்திலிருந்து சிதம்பரம் செல்லும் இரயில்பாதையில், கொள்ளிடம் இரயில் நிலையத்திற்குக் கிழக்கே 4 கி.மீ. தூரத்தில் ஆச்சாபுரம்என்ற தலம் அமைந்துள்ளது. இவ்வூரின் மற்றொரு பெயர் நல்லூர். இத்தலத்தில் திருஞானசம்பந்தருக்குத் திருமணம் நிகழ்ந்தது. எனவே, திருநல்லூர்ப் பெருமணம் என்ற பெயர் ஏற்பட்டது.

நாடு முழுவதும் யாத்திரை செய்து, ஸ்தலங்கள் தோறும் எழுந்தருளி, எம்பெருமானை வழிபட்டு, அடியார்களுக்கு ஞானோபதேசம் செய்தருளிய சம்பந்தர், சீகாழிக்கு வந்து சேர்கிறார். பெற்றோர் அவருக்குத் திருமணம் முடித்து வைக்கப் பெரிதும் விழைகின்றனர். அத்திருமணம் இந்தத் திருநல்லூர்ப் பெருமணம் என்ற ஊரில்தான் நடந்தது.

திருமணம் செய்து இல்லற வாழ்வில் ஈடுபட்டு உலகியலில் உழலுவதற்குச் சம்பந்தப் பெருமானுக்குச் சிறிதும் மனமில்லை. திருமணம் முடிந்ததும் திருக்கோயிலுக்குச் சென்றார். வழிபாடு செய்தார். அங்கு ஒரு ஜோதி தோன்றியது. சம்பந்தர், அவர் துணைவியார், திருமணம்காண வந்திருந்த திருநீலநக்க நாயனர், முருக நாயனர், திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனர் ஆகியோர் அந்த ஜோதியில் கலந்தருளினர்கள்.

''கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணம் சூடலரே தொண்டர்
நல்லூர்ப் பெருமணம் மேயநம் பானே.''

—எப்பொழுதும் அடியார்கள் போற்றிப் பரவுகின்ற திருநல்லூர்ப் பெருமணத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானே! மணம் மாருத பாமாலைகளைச் சூடுகின்றவரே! அம்மி மிதித்துச் சடங்குகள் செய்து திருமணம் முடிப்பதில் எனக்குச் சிறிதும் விருப்பம் இல்லை. சீகாழி உள்ளிட்ட பல தலங்களிலும், நான் பாடிய தேவாரப் பாடல்கள் பொய்யானவையா! நான் திருமணம் செய்து கொள்ளல் வேண்டும் என எத்தலத்திலாவது வேண்டிப் பாடியது உண்டா?—இவ்வாறு நல்லூர்ப் பெருமணத்து இறைவன் திருமுன்னர், சம்பந்தர் திருமணக் கோலத்துடன் வருந்திப் பாடுகின்றார்.

அம்மி மிதித்து அருந்ததி பார்த்துச் சடங்குகள் எல்லாம் செய்து திருமணம் முடித்து இல்லற வாழ்வில் ஈடுபடுவதற்குச் சம்பந்தப் பெருமானுக்குச் சிறிதும் விருப்பம் இல்லை.

''மனத்தகத்து அழுக்கு அறுத்த மௌனஞான
யோகிகள்
தனத்தடத்து இருப்பினும் பிறப்பு அறுத்து
இருப்பரே''

என்று சொல்லுவார்கள்.

மனத்திலே மாசுமறு இல்லாத ஞானியர், உலக இன்பத்தில் திளைக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டாலும், பிறவித் தளையை வேர் அறுக்கவே விரும்புவார்கள்.

மன மாசு இல்லாத ஞானி சம்பந்தர். உலக வாழ்க்கையில் சிக்கித் தவிக்காமல், பிறவியை ஒழிக்கவே விரும்பினர்.

சம்பந்தருக்கு முத்திப் பேறு கிடைக்கக் கூடிய காலம் நெருங்கி விட்டது. ''முத்திப் பேறு கிடைக்கக் கூடிய நிலையில், ஞானகுருவின் உபதேசத்தால், ஆன்மா தன்னிடத்திலே முதல்வனுகிய இறைவன் ஒளிந்து நிற்பதை உணரும்'' என்று சாத்திர நூல்கள் கூறுகின்றன. சம்பந்தருக்கு இறைவனே குருவாக அமைந்தான். ''சட்சு'' தீட்சையினல் சம்பந்தருக்கு ஞானத்தைப் புகட்டினன்.

திருக்கோவிலில் தோன்றிய ஜோதியினுள் கலந்தார் சம்பந்தர் என்று சொல்லப்படுகிறது. ஜோதி என்பது என்ன? ஞானம் பெற்ற அளவிலே, முதற்பொருளாகிய சிவபெருமானையே அருள்ஜோதி வடிவத்தில் கண்டார் சம்பந்தர். வேறு ஒன்றும் அவருக்குத் தெரியவில்லை.

பகலில் விளக்கின் ஒளி மங்கிவிடுவது போல, சிவனைக் கண்ட அளவிலே, ஆன்ம போதம் சிவத்துக்குள் ஐக்கியமாகியது.

மெய் எழுத்தாகியஉடம்பு எழுத்துக்கு மாத்திரை அரை. உயிர்க்குற்றெழுத்துக்கு மாத்திரை ஒன்று. உடம்பு எழுத்தும் உயிர் எழுத்தும் சேரும் போது ஒன்றரை மாத்திரை ஆகாது. ஒரு மாத்திரையே ஆகும்.

அதுபோல, சீவன் சிவத்துக்குள் ஐக்கியம் ஆகும்போது சீவனும் சிவனுமாக இல்லாமல், சிவனுகவே ஆகியது. இவ்வாறு முதற்பொருளாகிய பரம்பொருளைச் சேர்ந்து இன்பமடை

கின்றவர்கள் முத்தர்கள் எனப்படுவார்கள். முக்தி என்றால் நீக்கம் என்பது பொருள். உலக பந்தத்திலிருந்து விடுபட்டவர்களேமுக்தர்கள்.

"சார்பு உணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்
றழித்துச்
சார்தரா சார்தரு நோய் "என்கிறார் வள்ளுவர்.

— தான் எந்தப் பரம்பொருளைச் சார்ந்து இருக்கவேண்டுமோ அதனை உணர்ந்து, தன்னைப் பற்றியிருக்கும் பாசங்கள் எல்லாம் கெட ஒழுகினால், பிறவிப் பிணிக்குக் காரணமான தீவினைகள் வந்து பொருந்த மாட்டா.

சம்பந்தர் தாம் எந்தப் பரம்பொருளைச் சார்ந்து இருக்கவேண்டுமோ அந்தப் பரம் பொருளை உணர்ந்திருந்தார். தம்மைப் பற்றி யிருக்கும் பாசங்கள் கெட ஒழுகினார்.

"ஏகன் ஆகி இறைபணி நிற்க, மலமாயை தன்னொடு வல்வினை இன்றே" என்பது சிவ ஞான போதம். ஏகன் ஆகி இறைவனோடு ஐக்கியம் ஆகும்போது, ஜீவன் செய்கின்ற செயல்கள் அனைத்தும் சிவன் செயல்களாகவே கருதப்படும். அந்த நிலையில் மலமாயைத் துன்பமோ கொடிய வினைகளோ வந்து துன் புறுத்த மாட்டா.

சிவனோடு ஐக்கியம் ஆவதால் உண்டாகும் ஆனந்தம் சிவானந்தம் ஆகும். ஆனந்த அனு பவகாலத்தில் அனுபவத்தைக் கொடுக்கும் சிவத்தையும், அதனை நுகரும் தன்னையும் ஆன்மாவானது அறிந்து ஞானானந்த மயமாய் விளங்கும். இவ்வானந்தம் நித்தியானந்தமாய் நிலைபெற்றிருக்கும். இதனைச் சதானந்தம் என்றும் ஆன்றோர் கூறுவர்.

ஒருவருக்குத் தத்துவஞானம் ஏற்படும் போது அறியாமை நீங்குகிறது. அத்துடன், வித்தியா தத்துவம் முதலியவற்றால் உண்டா கும் சிற்றறிவாகிய சுட்டறிவும் விலகுகிறது. அதாவது, ஆன்மா வித்தியா தத்துவம்முதலிய தடைகளினின்று நீங்குகிறது. நீங்குவதால் ஆன்மாவின் சுத்த வியாபக உணர்வில் "சிவ போகம்" என்கின்ற பேரின்பம் எழுகின்றது.

"வித்தியா தத்துவங்கள் ஏழும் வெருண்டு ஓடச் சுத்தபர போதத்தைத் துய்க்குநாள் எந்நாளோ" என்கிறார் தாயுமான சுவாமிகள்.

வித்தியா தத்துவங்கள் ஏழையும் தலைகாட் டாமல் ஓடி மறையச் செய்து, சுத்த பர போகத்தை அனுபவித்தவர் சம்பந்தப்பெரு மான். தாம் மட்டும் அனுபவிக்கவில்லை. "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற பரந்த உள்ளத்தோடு, "சேரவாரும் ஜெகத்தீரே!" என்று தம்மைச் சார்ந்தவர் களையும் அழைத்துக்கொண்டு சென்று இறை வன் அருளாகிய ஆரா அமுதத்தை அனுபவிக் கும்படி செய்தவர் சம்பந்தர்.

தம்மைச் சார்ந்தவர்களுக்கும் நலம் செய்வது ஆன்றோர் இயல்பு. (முற்றும்)

---

# செய்திகள்

**நிகழ்பவை:**

ஜூலை மாதம் 17ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமையன்று விருதுநகர் பெரிய காளியம்மன் கோவிலில் ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள் ஒருநாள் அந்தர்யோகமும், மதுரை ஜில்லா கம்பத்தில் ஸ்ரீ வாசவி கன்னிகா பரமேஸ்வரி கல்யாண மஹாலில் **ஸ்ரீமத் அசலானந்த சுவாமிகள்** ஒருநாள் அந்தர்யோகமும்நடாத்து **வார்கள்.** ஜூலை மாதம் 17ஆம் தேதி இராம நாதபுரம் ஜில்லா அருப்புக்கோட்டை ஸ்ரீஅமுத லிங்கேசுவரர், அமுதவள்ளி அம்பிகை ஆல யத்தில் இரவு 7 மணியிலிருந்து 8 45 மணிவரை **ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள்** அந்தர் யோகமுறையில் அருளுரை வழங்குவார்கள்.

இவ்வாண்டு ஆலயவழிபாட்டுக்காக, ஜூலை மாதம் 31, ஆகஸ்டு 1 தேதிகளில் ஸ்ரீ விவேகா னந்த வித்தியாவனக் குருகுல 9, 10, 11ஆம் வகுப்பு மாணவர்கள் மதுரை மீனாட்சி அம்மன் ஆலயத்துக்கும், 8ஆம் வகுப்பு மாணவர்கள் திருச்செங்கோட்டுக்கும், ஏழாம் வகுப்பு மாண வர்கள் பூம்புகாருக்கும், 5, 6ஆம் வகுப்பு மாணவர்கள் திருவையாறு, திருப்பழனம் முதலிய சப்த ஸ்தலங்களுக்கும், இவ்வாண்டு புதிய மாணவர்கள் திருச்சித்து அருகாமையி லுள்ள ஆலயங்களுக்கும் செல்வார்கள்.

ஸ்ரீ விவேகானந்த வித்யாவன குருகுல மாண வர்கள் ஆடி விடுமுறைக்காக ஆகஸ்டு மாதம் 11ஆம் தேதி வியாழக்கிழமை மாலை 3 மணிக்கு மேல் அவரவர்ஊர்களுக்குப் புறப்படுவார்கள்.

---

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
## இயற்றிய நூல்கள்

திருவாசகம்-மூன்றும் பதிப்பு
பிரசார விலை ரூ. 14-00
ஸ்ரீமத் பகவத்கீதை-பதினொன்றும் பதிப்பு
பிரசார விலை ... 12-00
ஞானயோக விளக்கம் ... 8-00
ராஜயோக விளக்கம் ... 8-00
கர்மயோக விளக்கம் ... 7-00
பக்தியோக விளக்கம் ... 6-00
பரமஹம்சரின் பெருமை ... 6-00
விவேகானந்த விவரணம் ... 4-00
ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் ... 4-00
விவேகானந்த உபநிஷதம் ... 4-00
கடவுளின் வடிவங்கள் ... 4-00
சந்தேகம் தெளிதல் பாகம்-I ... 3-50
சந்தேகம் தெளிதல் பாகம்-II ... 3-50
ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்சரி
ஆறும் பதிப்பு-பிரசார விலை ... 2-75
தினசரி தியானம்-பதிமூன்றும் பதிப்பு
(பிளாஸ்டிக் உறையுடன்) பிரசாரவிலை ... 2-75
ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் ... 2-00
தேவரகசியம் (முதலிய கதைகள்) ... 2-00
ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம் ... 2-00
கண்ணன் என்னும் கடவுள் ... 2-00

**தாயுமானவர் இயற்றிய**
பரிபூரணானந்தம் ஷை ... 3-00
கருணாகரக்கடவுள் ஷை ... 2-00
மௌனகுரு வணக்கம் ஷை ... 1-50
பரசிவ வணக்கம் ஷை ... 0-50
விரதவீரர் பீஷ்மர் (நாடகம்) ... 1-50
சந்நியாசி ... 1-25
பஜனைப் பாடல்கள் ... 1-25
குழந்தைகளின் களிக்கூடம் ... 1-00
இராவணத் தத்துவம் ... 1-00
சகோதரி நிவேதிதை ... 1-00
ஹரிச்சந்திரன் (நாடகம்) ... 1-00
காயத்ரீ ... 1-00
வாலிமோக்ஷம் (நாடகம்) ... 1-00
தவப்புதல்வர்கள் (நாடகம்) ... 1-00
அறம் வளர்த்த நம்பி ... 0-95
நோய்க்கு இடம் கொடேல் ... 0-80
நன்மக்களைப் பெறுதல் ... 0-80
தானவீரன் கர்ணன் (நாடகம்) ... 0-80

பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) ரூ. 0-80
பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) ... 0-75
இறை வணக்கம் ... 0-75
*ஆத்ம சக்தி ... 0-75
செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? ... 0-75
*மனிதனது நிஜசொரூபம் ... 0-70
*சக்தி தத்துவம் ... 0-70
*சிவ தத்துவம் ... 0-70
பிரஹ்லாதன் (நாடகம்) ... 0-65
பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் ... 0-65
*ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் ... 0-60
இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் ... 0-60
*ஆலய வழிபாடு ... 0-60
ஸ்ரீ ராமகிருஷ்ணஷ்டோத்தர சத
நாமாவளி: ... 0-50
சைவன் யார்? ... 0-50
*சூரிய நாராயணன் ... 0-50
*முருகக் கடவுள் ... 0-50
*விஷ்ணு தத்துவம் ... 0-50
தெய்வீக மகிமைகள் ... 0-50
மார்க்கண்டேயன் (நாடகம்) ... 0-40
தபோபலன் (நாடகம்) ... 0-40
*கணபதி ... 0-40
அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் ... 0-30
பரசுராமர் கர்வ பங்கம் (நாடகம்) ... 0-15

The Bhagavad Gita (8th Imp.) ... 15-00
The Indian National Education ... 8-00
Sri Lalithambika Sahasranama Stotram ... 8-00
Ramakrishna Lives Vedanta ... 5-00
Facets of Brahman or The Hindu Gods ... 5-00
Daily Divine Digest (with plastic-
cover) ... 4-50
Mahabharata (with plastic cover) ... 4-50
Ramayana (do) ... 4-00
The Man Making Message of
Vivekananda (with plastic cover) ... 3-00
The Bhagavad Gita (Small Size)
(With plastic cover) ... 3-00
Sri Vishnu Sahasranama Stotram ... 2-50
Holy Bible—In the Light of Vedanta ... 1-50
*Introducing the Gita ... 1-50
*Key to Higher Life ... 0-75
*The Teacher ... 0-60
*The Student ... 0-45

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபாற் கட்டணத்திற்காக ஸ்ரீமத் பகவத்கீதைக்கு ரூ. 3-00ம் மஞ்சரிக்கு ரூ. 2-40ம் தினசரி தியானத்திற்கு ரூ. 2-20ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 2-50 முதல் 3-50 வரை சேர்த்து அனுப்புங்கள்.

*இக்குறிப்பிட்ட புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

**ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை-639 115, திருச்சி Dt.**

DHARMA CHAKRAM Regd. No. M. 6022

# ஸ்ரீமத் பகவத்கீதை

தேவநாகரியிலும் தமிழிலும் மூலம்

சுவாமி சித்பவானந்தர் அவர்கள் இயற்றிய

பதவுரை—பொழிப்புரை—விளக்கமான விரிவுரையுடன், ஏற்ற இடங்களில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் உபதேசங்களிலிருந்து மேற்கோள்களும் தரப்பட்டிருக்கின்றன.



எல்லாரும் அறிந்துகொள்ளக்கூடிய இனிய தமிழ் நடை. டெம்மி 1க்கு 8ல் 916 பக்கங்களை உடையது. அழகிய பிளாஸ்டிக் காலிகோ பைண்டு. ரூ. 15-00 மதிப்புள்ள இப்புத்தகம் பிரசார நோக்கத்தைக் கொண்டு மிகக் குறைந்த

விலை ரூ. 12-00க்கு விற்கப்படுகிறது.

(தபால் செலவு ரூ. 3-00)

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை-639 115 :: திருச்சி ஜில்லா

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Yogananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.